"ஹாங்காங்குக்குப்
போவானேன், எக்ஸ்போர்ட்
க்வாலிடி எஸ்ஆர்எம் உடுப்புத்
துணிகளைப் பெற!"




# எக்ஸ்போர்ட் குவாலிட்டி எஸ் ஆர் எம் துணிகள் இந்தியாவிலேயே கிடைக்கின்றன இப்போது.

வெளிநாட்டுத் தரமுள்ள எஸ்ஆர்எம் உடுப்புத்துணிகள். பூக் கோலங்கள், வித வித வடிவுகள், சம்பிரதாய ரகங்கள். இயல்பான சாயல்களிலும், வேறுப்ட்ட வ்ர்ணங்களிலும் வருபவை. 50–50பாலியெஸ்டர்-பருத்திக் கலப்பிலிருந்து தயாரிப்பு. தூய பருத்தியிலிருந்தும் நெசவு: பாப்லின், கேம்ப்ரிக். உலகத்தரம் வாய்ந்தவை

கிடைக்குமிடம்: உங்களூர் எஸ்.ஆர்எம் ஸ்டாக்கிஸ்டு.

ஸ்ரீராம் மில்ஸ் லிட்., கண்பத்ராவ் கடம் மார்க்
வொர்லி, பம்பாய் 400 013

Creative Unit-A 1151

# பச்சிளா மேனியைக் காப்பதற்கே
# பாப்பா காட்டும் வழி உமக்கே

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்—

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம்: பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது? பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு — ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

**பிறந்த நாளாய்ப் மிக்க மென்மையோடு**
**உங்கள் மேனி மிளிரப் பேருதவி**

Johnson & Johnson*






லின்டாஸ்-J&J. 4-140 TM



TI/CH-7678R

# உறுதியும் வேகமும் உள்ள ஹெர்குலிஸ் சைக்கிளில் சவாரி செய்யுங்கள்



உண்மை! ஹெர்குலிஸ் சைக்கிளை அதிக பாரத்தை தாங்கும் அமைப்புகளுடன் உறுதியாக உருவாக்கியுள்ளோம். உதாரணமாக உறுதியான எஃகுக் குழாய்களாலான அதன் ஃபிரேம், வலுவேற்றிய எஃகு செயின், இலகுவாக ஓட்டும் வகையில் ஃப்ரீ-வீல், சிறப்பான பிடிமானத்துக்கும் சுலபமாக பிரேக் பிடிக்கவும் தகுந்த வகையில் சரியான வளைவுகளுடன் கூடிய ஹாண்டில் பார்.

ஹெர்குலிஸின் ஒவ்வொரு பகுதியும் இலகுவான சவாரிக்கு ஏற்ற வகையில் விஞ்ஞான முறைப்படி அமைக்கப்பட்டது.






டிஐ சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா
அம்பத்தூர், சென்னை 600053

உங்கள் பணியில் 25 ஆண்டுகள் — 1949-1974

# ஹெர்குலிஸ்

—உலகிலேயே உறுதியான சைக்கிள்.

# கல்கி பொருளடக்கம்

பிரமாதீச, பங்குனி 11, ■ மார்ச் 24, 1974





மேலட்டை:

"அகல் ஏற்றினேன், அரளி சூட்டினேன்;
துளசித் தாயே! தூய உள்ளம் தா!"

வண்ணப்படம்: தரராலிங்கம்

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

| கல்கி சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |

# வணக்கம்

## இனிய எண்ணங்கள் ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாக எப்படித்தான் மலர்கின்றன!

எழுபது ஆண்டுகளுக்கு முன் ஜாம்ஷெட்ஜீ டாட்டாவின் மனதில் தோன்றியதொரு கனவு, இன்று பம்பாயில் தாஜ்மஹால் எனப்படும் இன்ப நனவாக மலர்ந்தது, தனது நகரத்தின் மீதும், நாட்டின்மீதும் அவர் கொண்டிருந்த அளவற்ற அன்பினால் தாஜ் மஹாலைக் கட்டினார்.

பல வருடங்களாக ஜனங்களை பம்பாய்க்கு ஈர்ப்பதில் தாஜ் பெரும்பங்காற்றியுள்ளது. அது தனது ஆயுட்காலத்திலேயே ஒரு அதிசயமாக ஆகிவிட்டது. அதைப் பற்றி புத்தகங்களில் எழுதப்படுகிறது. அது திரைப்படங்களில் காட்டப்படுகிறது. உலக நிறுவனம் ஒன்று அதை கிழக்கில் மிகச் சிறந்ததொரு யாத்திரைவிடுதி எனக்கூறியுள்ளது.

இப்பொழுது, 70 ஆண்டுகளுக்குப் பின், இன்னுமொரு மாநகரத்தை வெகுவிரைவில் மற்றொரு தாஜ் அலங்கரிக்கும். இந்த ஏப்ரலில் திறக்கப்படவிருக்கும் தாஜ் கோரமாண்டல் சென்னையிலேயே மிகச் சிறந்த ஓட்டலாக விளங்கும்.

தென்னிந்தியாவிற்கு சுற்றுலாவைப் பெருமளவில் வளர்க்க அது உதவும். சென்னை மாநகரத்திலே வாணிப வளர்ச்சியை அதிகரிக்கவும் அது உதவும். பழம்பெரும் தாஜ் போலவே இந்தப் புதிய தாஜ் நீங்கள் எதிர்பார்ப்பது போலத் திகழும், நம்புராதனக் கலாசாரத்தைப் பிரதிபலிக்கும் என நம்புகிறோம்.

ஏப்ரல் 1974ல் திறக்கப்படுசிறது.



SIMOES/T-364

தாஜ் மஹால் ஓட்டல் குழுவின் ஒரு அங்கம்



**Taj Coromandel Hotel**
Madras.

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா --பாரதியார்



மலர் 33 : : இதழ் 34

# இதுவும் ஒரு சாதனையா?

மக்களின் க்ஷேம நலன்களை முதன்மையாகக் கருதும் எந்த அரசாங்கமும் முதலிடம் கொடுத்துக் கவனிக்க வேண்டிய அம்சங்கள் இரண்டு: எல்லோருக்கும் வேலை வாய்ப்பு; வயோதிக காலப் பாதுகாப்பு. இவ்விரண்டையும் செயல்படுத்திக் காட்டாவிட்டால் எந்த அரசும் தன்னை சோஷலிஸ அரசு என்று கூறிக்கொள்வதில் பொருள் இல்லை.

தமிழ்நாடு முதல்வர் இவ்வாண்டு பட்ஜெட் உரையில் சமூக நலப் பாதுகாப்பு என்று வயோதிகக் காலப் பென்ஷன் திட்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். இதன்படி, மாதா மாதம் யார் யார் தவறாது தவணைப் பணம் நீண்ட காலத்துக்குச் செலுத்தி வருகிறார்களோ, அவர்களுக்கு வயோதிகக் காலத்தில் மாதா மாதம் பென்ஷன் அளிக்கப்படும். உதாரணமாக முப்பது வயதுள்ள ஒருவர், மாதா மாதம் பத்து ரூபாய் விதம் இருபத்தைந்து ஆண்டுகளுக்குத் தவணை செலுத்தி வந்தால், அவரது ஐம்பத்தைந்தாவது வயதிலிருந்து ஆயுள் வரையிலும் மாதம் ரூபாய் நூறு பென்ஷன் அளிக்கப்படும். அவர் ஐம்பத்தைந்து வயதை அடையு முன்னரே இறக்க நேர்ந்தால் அவர் செலுத்திய தொகை வட்டியுடன் சேர்த்து அவருடைய வாரிசுகளுக்குக் கொடுக்கப்படும்.

இந்தத் திட்டத்தின் கீழ், பணம் செலுத்துபவருக்கு மட்டுமே பென்ஷன் கிடைக்கும். அதுவும் தவறாமல் கட்ட வேண்டும். நல்ல வேலையிலோ, நிரந்தரமாகச் சம்பாதிக்கும் வாய்ப்புள்ள நிலையிலோ இருப்பவர்களால் மட்டுமே மாதத் தவணைகளை ஒழுங்காகச் செலுத்தி வர முடியும். அவர்கள் பெரும்பாலும் தங்களுடைய வயோதிகக் காலத் தேவைகளை வேறு பல வகைகளில் பூர்த்தி செய்து கொள்ளக் கூடியவர்கள். பட்டினி கிடந்து வாட மாட்டார்கள். ஆனால் சம்பாத்தியம் இல்லாதவனுக்கும், வருவாய் துண்டித்துப் போனவனுக்கும் தவணை செலுத்த முடியாதவனுக்கும் இந்த பென்ஷன் கிடைக்காது. உண்மையில் அப்படிப்பட்டவர்களுக்குத்தான் வயோதிகக் காலப் பாதுகாப்பு அவசியமாகும். ஏனெனில் அரசாங்கத்தின் ஆதரவு இல்லையேல் அவர்களின் கதி அதோகதிதான். நமது சமூக அமைப்பில் கூட்டுக் குடும்பம் செழிப்பாகச் செயல்பட்டபோது, வயோதிகக் காலப் பாதுகாப்பைக் கூட்டுக் குடும்ப அமைப்பு திருப்திகரமாகவோ அல்லது ஏதோ ஓரளவுக்கோ அளித்து வந்தது. காலப் போக்கில் அரசாங்கச் சட்டங்களாலும், நவீன வாழ்க்கை முறைகளினாலும், கூட்டுக் குடும்பமுறை சிதறிப் போய் விட்டது. அத்துடன் வயோதிகக் காலப் பாதுகாப்பும் குன்றிவிட்டது.

முதல்வர் கருணாநிதியின் பென்ஷன் திட்டம் சமூகத்தில் உள்ள இந்தக் குறைபாட்டை நிவர்த்திக்க முற்படவில்லை.

சேமிப்புச் செய்தால் பென்ஷன், இல்லாவிட்டால் இல்லை என்ற திட்டம் பாதுகாப்புத் திட்டமே அல்ல. ஆயுள் இன்ஷ்யூரன்ஸ், யூனிட் டிரஸ்ட் போன்ற நிறுவனங்கள் வகுத்துள்ள ஏராளமான சேமிப்புத் திட்டங்களைப் போன்றதே தமிழ்நாடு முதல்வரின் திட்டமும். இதன் மூலம் அரசாங்கம் வசதியுள்ளவர்களிடமிருந்து பெருந் தொகையைத் திரட்டித் தனது பல்வேறு திட்டங்களுக்குச் செலவு செய்ய வாய்ப்புத்தான் கிடைக்கும். இதைத்தான் முதல்வர் ஒருகால் விரும்புகிறாரோ?

சமூகப் பாதுகாப்புத் திட்டம் என்று சேமிப்புத் திட்டத்துக்கு மாற்றுப் பெயர் கொடுத்து இதனையும் ஒரு சாதனையாகப் பறைசாற்றி மக்களை முதல்வர் ஏமாற்ற முடியாது. ஆளும் கட்சி வேகமாக இழந்து கொண்டு வரும் கௌரவத்தை இதன் மூலம் நிலை நாட்டவும் முடியாது.

55 வயது அல்லது 58 வயதுக்கு மேற்பட்ட, பாதுகாப்பற்ற ஆண் பெண் யாவருக்கும் அரசு பாதுகாப்பளிக்க முன்வரவேண்டும். இது முற்றிலும் சாத்தியமே. தமிழ் நாட்டைப் பொறுத்த மட்டிலுமாவது இதைச் செய்து முடிக்கலாம். அரசாங்கத்தின் ஊதாரிச் செலவுகளைக் குறைப்பதன் மூலம் அவசியமான இந்த வயோதிகக் காலப் பாதுகாப்புக்கு வகை செய்வது சாத்தியமே. அதுதான் உண்மைப் பாதுகாப்பாகும்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## குடியாத்தம் தீ விபத்து

சில வாரங்களுக்குமுன் அந்தமானில் ஏற்பட்ட மிகப் பெரிய தீ விபத்தைப் போல் மற்றும் ஒரு பெரிய தீ விபத்து தமிழ்நாட்டில் வடார்க்காடு மாவட்டத்தில் வேலூருக்கு அருகே உள்ள குடியாத்தம் நகரில் மார்ச் 10ந் தேதி ஏற்பட்டுப் பெருத்த சேதம் விளைவித்துவிட்டது.

இந்தத் தீ விபத்தில் சில குழந்தைகளும் வயோதிகர்களும் மாண்டு போய்விட்டனர். பலர் காயமுற்று ஆஸ்பத்திரியில் இருக்கின்றனர். பல லட்சக்கணக்கான ரூபாய்களுக்குச் சேதம் ஏற்பட்டிருக்கிறது. சுமார் பத்துத் தெருக்களும், 2,000 வீடுகளும் இந்தப் பெரிய தீ விபத்தினால் பாதிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

பகல் மூன்று மணிக்குப் பிடித்த தீயை அணைக்க இரவு 7-30 மணி வரை போராடியிருக்கிறார்கள். தீயை அணைப்பதற்காகச் சென்னையிலிருந்தும், திருப்பத்தூர், ராணிப்பேட்டை, வேலூர், ஆம்பூர், திருவண்ணாமலை ஆகிய இடங்களிலிருந்தும் தீயணைப்பு வண்டிகள் வந்து முயல வேண்டிய அளவு விபத்து மிகப் பெரிதாக நேர்ந்திருக்கிறது. குடியாத்தம் தரணிப் பேட்டைப் பகுதியில் தொடங்கிய இந்தத் தீ விபத்து பரவுகையில், நகர சுத்தித் தொழிலாளர்கள் வசிக்கும் ஒரு குடியிருப்புப் பகுதி தரைமட்டமாக எரிந்து தணிந்துவிட்டதாகத் தெரிகிறது. நாட்டில் வறுமையும், பண்டங்களின் விலைவாசி உயர்வுமே மக்களைப் போதுமான அளவு துன்புறுத்தும்போது, இப்படி விபத்துக்களால் இன்னும் அதிகமான துன்பம் நேரிடுவது கற்பனை செய்ய முடியாத வேதனையாகும். தீ விபத்தால் துன்புற்று நடுத் தெருவில் நிற்கும் மக்களுக்கு நம்மால் முடிந்த உதவிகளைச் செய்வதுதான் இந்த நிலையில் நாம் அவர்களுக்கு அளிக்கும் ஆறுதலாகவும் அனுதாபமாகவும் இருக்க முடியும்.

## பள்ளிக் கேள்விகளில் அரசியல்

இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த தேவகோட்டைக் கல்விப் பிரிவு வட்டாரத்தில் 73ம் ஆண்டுக்குரிய பரீட்சையில் ஆங்கிலப் பாடம் சம்பந்தப்பட்ட கேள்விகளில் அரசியல் சாயலைப் புகுத்தி வினாக்களை அமைத்திருந்தார் என்பதற்காக ஓர் ஆசிரியர் மேல் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று கல்வி அமைச்சர் சட்டசபையில் கூறியிருக்கிறார்.

## மருத்துவ மாமணியின் மறைவு

டாக்டர் பி. கே. துரைஸ்வாமி என்று சொன்ன மாத்திரத்திலேயே முடங்கிப் போன எலும்புகள் நிமிர்ந்துவிடும் எனச் சொல்வதுண்டு. முடநீக்கு இயலில் அப்படிப்பட்ட நிபுணராக அவர் விளங்கிவந்தார். பொதுவில் மருத்துவப் பணியே சிறந்த மானுட சேவை எனில், இளம் குழந்தைகளின் ஊனத்தை நீக்கும் வைத்தியப் பிரிவு அதிலும் தலையாய பெருமை படைத்ததாகும். டாக்டர் துரைஸ்வாமியின் மந்திர ஜால ஸ்பரிசம் பெற்று ஊனம் நீங்கிப் புது வாழ்வு பெற்ற பாலர்கள் அனந்தம். பிறக்கும்போதே பலவித ஊனம் கொண்ட குழந்தைகளைத் தேற்றி உருவாக்குவதில் அவர் புதுப் புது வழிமுறைகளைக் கண்டவர்.



லிவர்பூல், பால்டிமோர் முதலிய வெளிநாட்டு நகரங்களில் மருத்துவப் பணி புரிந்தபின், சிறப்பான அநுபவத்துடனும், அநுபவத்துக்கும் மேம்பட்ட ஓர் அதீத உள்ளுணர்வுடனும் அவர் தாயகம் திரும்பித் தில்லியில் அகில இந்திய மருத்துவ விஞ்ஞானக் கழகத்தில் சேர்ந்தார். புதிதாக முடநீக்கு இயல் பிரிவைத் தொடங்கி வைத்தார். பிறகு சுகாதாரத் துறையின் தலைமை இயக்குநர் ஆனார். பதவியிலிருந்து ஓய்வு பெற்ற பின்னும் மத்திய சுகாதார அமைச்சகத்தின் ஆலோசகராக இருந்து வந்திருக்கிறார். அவர் அகில உலக மருத்துவ சங்கங்களில் அங்கம் வகித்து நாட்டுக்குப் பெருமை தேடித் தந்த ரணசிகித்சை மேதை. கிராமப் புறங்களிலெல்லாம் நடமாடும் வைத்தியசாலைகளின் சேவை பரவ வேண்டும் என்பதற்காக அரிய திட்டம் தீட்டியவர். மனிதாபிமானமும், நட்பு உள்ளமும், நிறைந்த சுவை உணர்வும் படைத்த நல்ல மனிதர்.

புதுவையில் நோயுற்றிருந்த மருகரைக் காண வந்த இடத்தில், ரத்த நாளம் வெடித்து ஸ்ரீ துரைஸ்வாமி காலமானது பரிதாபம்! எத்தனையோ கொடு நோய்களை ஆற்றிய இந்த மருத்துவமணி இன்று எண்ணற்ற நண்பர்களை ஆற்றவும் தேற்றவும் ஒண்ணாத துயரத்தில் ஆழ்த்திவிட்டார்.


ஆஜர்!
ஆஜர்!
ஆஜர்!
ஆஜர்!
ஆஜர்!
ஆஜர்!


என்னுங்க இப்படிச் சோர்ந்து
உட்கார்ந்துட்டீங்க? நாமும்
'மேக்-அப்' போட்டா அவரைக்
-காட்டிலும் அதிக வோட்டு வாங்கலாம்!


நம்மைவிடத் தடிமனான தோலுடையவர்கள்
மனித ஜாதியில் இருக்கிறார்கள்...
விலகமாட்டேன்
நிக்ஸன்

விளுத்தாளில் 'செயப்பாட்டு வினையில் மாற்றுக' என்றும் பிற விதங்களிலும் கொடுக்கப்பட்டிருந்த வாக்கியங்கள்:

'' நாம் நிச்சயம் தேர்தலில் ஜெயிப்போம். தலைவர் தம் கட்சியினருக்கு உறுதியாகக் கூறினார்.''

''போய் இளைஞர்களை எல்லாம் திரட்டு. காளிமுத்துவிடம் இராமச்சந்திரன் கூறினார்.''

''கருணா சொன்னார்: ஓ! கடவுளே! நான் அழிந்தேன்.''

சம்பந்தப்பட்ட ஆசிரியரிடம் இதுபற்றி எழுத்து மூலம் கேட்கப்பட்ட விளக்கம் திருப்தியளிக்கவில்லை என்பதனால் சஸ்பெண்ட் செய்யப்பட்டுக் குற்றம் சாட்டப்பட்டுள்ளார் என்று அமைச்சர் கூறியுள்ளார்.

தி. மு.க. ஆதரவு ஆசிரியர்கள் யாராவது தி. மு. க. ஆதரவான கேள்விகளைக் கேட்டால் அவர்கள் மீதும் பாரபட்சமின்றி நடவடிக்கை எடுக்க வேண்டும். தி.மு.க.வுக்கு எதிரான ஆசிரியர் தி.மு.க.வுக்கு எதிரான கேள்விகளைக் கேட்டால் மட்டும் நடவடிக்கை, மற்றவர்கள் மேல் நடவடிக்கை இல்லை என்று வந்து விட்டால் பயனில்லை.

## காங்கிரஸ் உறவுகள்

மார்ச் மாதம் 10ந் தேதி சென்னையில் கூடிய ஸ்தாபன காங்கிரஸின் மாநிலச் செயற்குழு, 'இரு காங்கிரஸ் உறவு நீடிக்கும்' என்று அறிவித்திருக்கிறது. காலஞ்சென்ற டி.டி.கே. அவர்களின் முயற்சியால் தமிழக அளவில் இரு காங்கிரஸ் கட்சிகள் இணைந்து செயல்படுவது சாத்தியமாகியிருக்கிறது என்பது பலருக்குத் திருப்தி தரும் செய்தியாக இருக்கும்.

இதன் முதல் அடையாளமாக முன்னாள் ஆடிட்டர் ஜெனரலும், டி.டி.கே.யின் உறவினருமான திரு எஸ். ரங்கநாதனைச் சுயேச்சையாக ராஜ்ய சபைக்குத் தேர்ந்தெடுப்பதில் இரு காங்கிரசும் ஒத்துழைக்க விருக்கின்றன.

## உரத்தைக் காணவில்லை!

தமிழ்நாட்டில் உள்ள அரசாங்கக் கிடங்குகளில் இருந்து நூற்றுக்கணக்கான அரிசி மூட்டைகள் களவு போனதாகச் சென்ற சில ஆண்டுகளில் பல செய்திகள் பத்திரிகைகளில் வந்துள்ளன. இப்போது மதுரை மாவட்ட கூட்டுறவுச் சங்கக் கிடங்கு ஒன்றிலிருந்து 3,600 மூட்டை உரம் மாயமாக மறைந்துவிட்டதாகப் பத்திரிகைகளில் செய்தி வந்திருக்கிறது. அதன் மதிப்பு சில லட்சம் ரூபாய் இருக்கும் என்று தெரிகிறது. கடலூர் கிடங்கிலிருந்து 8000 மூட்டை நெல் மறைவு என்பது இவ்வாரத்திய மற்றொரு செய்தியாகும்.

அரசாங்க வர்த்தகக் கிடங்கிலிருந்து திருட்டுப் போகும் நிகழ்ச்சிகள் சர்வ சாதாரணமாகி வருகின்றன. அரசாங்கக் கிடங்கு என்றால் கவனக் குறைவால் பெரும் அளவு திருடு போவது சகஜம் என்று நினைக்கும் நிலைகூட வந்துவிட்டது. அரசாங்க வியாபாரம் - விநியோகம் என்றால் இந்த நிலைதான். அரசாங்கம் ஆள்வதோடு நிற்க வேண்டும். வியாபாரம் அதற்குத் தேவையில்லை.

## உதவி சபாநாயகர் ராஜிநாமா

ஒருவர் சபாநாயகராகும்போது — அல்லது உதவி சபாநாயகராகும்போதே கட்சிக்கு அப்பாற்பட்டவராகிவிடுகிறார். அப்புறம் அவரைக் கட்சி ஆதரவு — எதிர்ப்பை மையமாக வைத்துப் பதவி நீக்கத் தீர்மானம் கொண்டு வருவது முறையா என்று ஒரு கேள்வி எழும். தமிழ்நாடு சட்டசபையில் உதவிசபாநாயகர் சீநிவாசனை நீக்கும் தீர்மானத்தைத் தி.மு.க. உறுப்பினர் ஒருவர் சமீபத்தில் கொண்டு வந்தபோது, ''தீர்மானத்தில் பதவியிலிருந்து உதவி சபாநாயகரை ஏன் நீக்க வேண்டும் என்பதற்கான காரணம் தெளிவாகச் சொல்லப்படவில்லையே? அது எப்படிச் சரியான தீர்மானமாகும்?'' என்று உடனே எதிர்க்கட்சி உறுப்பினர் ஒருவர் ஒழுங்குப் பிரச்னையைக் கிளப்பினார்.

'' அப்படிக் காரணம் காட்ட வேண்டிய அவசியமில்லை'' என்று ஆளும் கட்சி உறுப்பினர்கள் கூறியிருக்கிறார்கள். ''முன்பு சபாநாயகர் மதியழகன் மீது கொண்டு வந்த நீக்கத் தீர்மானத்திலும் காரணம் கூறப்படவில்லை'' என்றுகூடச் சுட்டிக்காட்டப்பட்டிருக்கிறது.

நல்லவேளையாக அதற்குள் சீநிவாசனே ராஜிநாமா செய்து அவசியமற்ற விவாதத்திலிருந்து தப்பிவிட்டார். சபாநாயகர், உதவி சபாநாயகர் போன்றவர்களை விவாதத்துக்கு ஆளாக்கும்போது கண்ணியமான மரபுகளை எல்லாத் தரப்பினரும் காப்பாற்றினால்தான் சபைக்குப் பெருமை உண்டு.

### ராஜாஜி சிந்தனை

பிறர் நன்மையையும் க்ஷேமத்தையும் கவனிக்காமல் மறதியின் காரணமாகச் சில காரியங்களைச் செய்து விடுகிறோம். அதனால் அவர்களுக்குத் துன்பம் நேரிடுகிறது. மறதி என்பது இங்கே பிறருடைய நலத்தை மறப்பது. இப்படிச் செய்தால் தெய்வமும் நம்முடைய நலத்தை மறந்துவிடும். மறந்துவிட்டு நமக்குத் துன்பம் உண்டாக்கும் நிகழ்ச்சிகள் நடக்கச் செய்யும். பிறருடைய க்ஷேமத்தை நினைவில் வைப்பது கடமை. மறதி குற்றமாகும். அந்தக் குற்றத்தின் விளைவிலிருந்து தப்ப முடியாது.

# அம்பாளின் இருப்பிடம்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய சுவாமிகள்

பராசக்தி பரவியில்லாத இடம் ஏதுமில்லை. ஆனால் மனசுக்குப் பிடிப்பு உண்டாவதற்காக அவளுக்குப் பல வாச ஸ்தானங்களைச் சொல்லியிருக்கிறது. முக்கியமாக ஸ்ரீ வித்யா என்கிற தேவீ உபாஸனா மார்க்கத்தில் சொல்கிறபோது அவள் அமிருதசாகரத்தின் மத்தியில், மணித்வீபம் என்கிற மணிமயமான தீவில், பல கோட்டைகள் உத்தியான வனங்களுக்குள், சிந்தாமணிகளையே இழைத்துச் செய்த கிருகத்துக்குள், பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மகேசுவரன், சதாசிவன் இவர்களது உருவான சிம்மாசனத்தில், இதன் மேல் பரப்பிரம்ம ஸ்வரூபமான காமேசுவரனின் இடது தொடையில் அமர்ந்திருக்கிறாள் என்று சொல்லியிருக்கிறது. அவள் இருக்கும் இடத்தை 'ஸ்ரீபுரம்' என்று கூறியிருக்கிறது. இதை அமிருத சாகரத்தில் இருப்பதாகச் சொல்கிற மாதிரியே ஸ்வர்ணமயமான மேரு சிகரத்தில் இருப்பதாகவும் சொல்வதுண்டு.

தியானம் செய்வதற்குப் பரம சௌக்கியமாக இன்னொரு வாசஸ்தானமும் சொல்லியிருக்கிறது. லலிதா ஸஹஸ்ரநாமத்தின் பலச்ருதியில் சொல்லியிருக்கிற இந்த முறையில் பல மகான்கள் அவளுடைய இருப்பிடத்தைத் தியானம் செய்து பரமானந்தத்தை அநுபவிக்கிறார்கள். அது என்னவென்றால், பூரண சந்திர மண்டலத்துக்குள் அம்பாள் அமர்ந்திருப்பதாகத் தியானம் செய்வதே ஆகும். ஸஹஸ்ரநாமத்திலேயே 'சந்திர மண்டல மத்யகா' என்று ஒரு நாமம் வருகிறது.

பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத அழகுள்ளது சந்திரன். எலெக்ட்ரிக் ஜோடனை அதிகமாகிவிட்ட இந்தக் காலத்தவர்களுக்குச் சந்திரனின் அருமை தெரிந்திருக்க நியாயமில்லை. சீதளமான அதன் பிரகாசம் அலாதியானது. கண்ணை உறுத்தாத ஒளி வாய்ந்தது சந்திரன். அதிலும் பௌர்ணமி சந்திரனின் அழகு விசேஷம். இந்த அழகு விசேஷமாக இருக்க வேண்டும் என்பதற்கே ஈசுவர நியதியில் முப்பது நாட்களுக்கு ஒரு முறைதான் பூர்ணிமை வருகிறது. தினமும் பௌர்ணமியிருந்தால் பூரண சந்திரனில் நாம் இத்தனை சந்தோஷம் அடைய முடியாது. இந்தப் பூரண சந்திர மண்டலத்தை முதலில் தியானித்து, அதில் அம்பாளைத் தியானிக்க வேண்டும்.

பூர்ண சந்திரனைத் தியானிக்கிற போதே மனசும் அதுபோல் குளிர்ந்து போகிறது. அங்கே துக்கத்துக்கும் துவேஷத்துக்கும் இடமில்லாமல் சாந்தமாகிறது. வெளிப் பிரபஞ்சமெல்லாம் ஜீவனுக்குள்ளே இருக்கிறது. அண்டத்திலுள்ளதெல்லாம் பிண்டத்திலும் உண்டு என்பார்கள். சகல ஜீவராசிகளுக்கும் அந்தராத்மாவாக இருக்கிற பராசக்தியின் மனமே சந்திரனாக ஆகியிருக்கிறது. 'புருஷ ஸூக்த'த்தில் இப்படித்தான் சொல்லியிருக்கிறது. இதனால் ஜீவராசிகளின் மனத்துக்கும் சந்திரனுக்கும் சம்பந்தம் இருக்கிறது. இங்கிலீஷில் சித்தப் பிரமை பிடித்தவர்களை Lunatic என்கிறார்கள். Lunar என்றாலே சந்திரனைப் பற்றியது என்றுதான் அர்த்தம். இது சித்தத்தின் விபரீத நிலையைச் சந்திரனோடு சேர்த்துச் சொல்கிறது. சித்தசுத்திக்கு அதே சந்திர மண்டலத்தில் அம்பாள் தியானத்தை நம் சாஸ்திரங்கள் சொல்கின்றன.

சந்திரனில் அம்பாள் அமர்ந்திருப்பதாகத் தியானிக்க வேண்டும். தியானம் செய்கிறவனுக்கோ புலித் தோலை ஆசனமாக விதித்திருக்கிறது. சந்திரனுக்கு நேர் எதிராக இது உக்கிரமாக இருக்கிறது. புலி எப்படித் தன் இலட்சியமான இரையை ஒரே பாய்ச்சலில் பிடித்து வருகிறதோ, அப்படி நம் தியான லட்சியத்தை மனசு கைப் பிடியாகப் பிடித்துக் கொள்வதற்கே வியாக்ராஸனம் விதித்திருக்கிறது. அதில் அமர்ந்து அம்பாளைச் சந்திர மண்டலவாசினியாக தியானித்தால் நம் மனமும் அவள் மனத்திலிருந்து வந்த சந்திரனைப் போல் குளிர்ச்சி அடையும். சந்திரன் தாபத்தைப் போக்குவது போல் நம் தாபமும் சமனமாகும். சந்திரிகையில் இருட்டு விலகுகிற மாதிரி நம் அஞ்ஞானம் விலகும்.

சூரியனை ஞான ஸ்வரூபமாகச் சொல்லியிருக்கிறது. ஆனால் சூரியப் பிரகாசம் தாபம் உண்டாக்குகிறது. அதுவே சந்திரனில் பிரதிபலித்துப் பரம சீதளமாகிறது.' சந்திரனுக்குச் சுபாவமாக ஒளி கிடையாது. அம்பாள் சூரியனைப் போல் சுயம்பிரகாசமாகவும் சந்திரனைப் போல் சீதளமாகவும் இருக்கிறாள். தாபத்தைப் போக்கும்போதே ஞானப் பிரகாசமும் தருகிறாள். ஞானம் தருகிற குருமூர்த்தி அவளேதான். காளிதாஸர்கூட 'தேசிக ரூபேண தர்சிதாப்யுதயாம்' — குரு வடிவத்தில் வந்து தன் மகிமையைக் காட்டுகிறவள் — என்று அம்பிகையை வர்ணிக்கிறார். எனவே சந்திர மண்டலத்தில் குருபாதத்தையும் தியானிக்கலாம். நம் தாபங்கள் விலகவும், ஞானப் பிரகாசம் உண்டாகவும், நாம் எல்லோரிடமும் குளிர்ந்து இருக்கவும் இம்மாதிரி சந்திர மண்டலத்தில் அம்பாளையோ, குரு பாதுகையையோ தியானிப்போம்.



# அண்ணல் ஆதரிக்க மாட்டார்!

இருபத்தாறு ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு நாள் மாலை இந்தப் பாரத புண்ணியபூமியில் பிறந்த அனைவரும் 'என்ன பாவம் செய்தோமோ' என்று துயருற்றுக் கண்ணீர் பெருக்கும்படி பயங்கரமான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. கோடானு கோடி மக்கள் தங்கள் இதயங்களில் வைத்துப் பூஜித்த அண்ணல் காந்தியடிகள் அன்று பிர்லா மாளிகைத் தோட்டத்தில் பிரார்த்தனைக் கூட்டத்துக்காக நடந்து சென்று கொண்டிருக்கையில் சுட்டுக் கொல்லப்பட்டார். இதனால் ஏற்பட்ட அதிர்ச்சியும் துயரமும் முழுமையாக அடங்குவதற்கு முன்பாகவே சிலர் அண்ணலின் கடைசி மூச்சு பிரிந்த இடமான பிர்லா மாளிகையையும் பூங்காவையும் பொதுவுடைமையாக்க வேண்டும் என்று குரலை உயர்த்தினார்கள். அப்போது சர்தார் பட்டேலும் நேருஜியும் இது தர்ம நியாயமாகாது என்று கருதி இந்தச் சர்ச்சைக்கு முற்றுப்புள்ளி வைத்தார்கள். ஆனால் இரண்டாண்டுகளுக்கு முன்னால் இந்தக் கோரிக்கை மீண்டும் எழுப்பப்பட்டு இந்திரா ஆட்சி, பிர்லா மாளிகையையும் அதைச் சுற்றியுள்ள பூங்காவையும் அரசுடைமையாக்கியது. அதாவது சர்தார் பட்டேலும் நேருஜியும் செய்த ஒரு தர்ம நியாயமான முடிவுக்கு எதிராக இன்றைய இந்திரா அரசு நடந்து கொண்டிருக்கிறது. இதுபற்றி யாருக்கேனும் சந்தேகம் இருக்குமாயின் அவர்கள் அஹமதாபாத் நவஜீவன் பிரசுராலயம் வெளியிட்டு வரும் ''ஸர்தார் பட்டேல் கடிதங்கள்'' என்ற நூலின் ஆறாவது தொகுதியைப் படித்துப் பார்க்கலாம். அவ்விதம் அந்நூலைப் படிக்க முடியாதவர்களுக்காகச் சம்பந்தப்பட்ட கடிதத்தின் சாரமான பகுதியை இங்கு தருகிறோம்.

ஸர்தார் பட்டேல், இது சம்பந்தமாக ஜவாஹர்லால் நேருவுக்கு 1948ம் ஆண்டு மே மாதம் 13ந் தேதி எழுதிய கடிதத்தில், தமது கருத்தை ஆணித்தரமாக விளக்கியுள்ளார். அவர் சொல்லுகிறார்:

'' (பிர்லா மாளிகை சம்பந்தமாக) எத்தனை பேர்கள் எப்படி எப்படி வற்புறுத்தினாலும், அதற்குப் பணிவது நியாயமாக ஆகாது. நேர்மைக்கு விரோதம். தருமத்துக்கும் முரணானது. பொதுமக்கள் விரும்புகிறார்கள் என்பதற்காக, தவறான காரியத்தை நாம் செய்யக் கூடாது. அதை எதிர்ப்பது நம்முடைய கடமை. நம்முடைய கருத்தை உடனடியாக, தைரியமாகத் தெளிவுபடுத்தாமையே, மக்கள் இப்போது மேற்கொள்ளும் உணர்ச்சி வேகத்துக்கு ஒரு காரணம் என்றுகூட நான் நினைக்கிறேன். பிர்லா மாளிகையை அவரிடமிருந்து பறித்துவிட வேண்டும் என்பதை நான் ஒருபோதும் சரியானது என்றோ, நியாயமானது என்றோ ஏற்றுக் கொள்ள முடியாது. அது மகத்தான அநீதியாகும்: அவருக்குச் செய்யப்படும் கொடுமையான



தவறாகும். இந்த அநீதி நிகழாமல், நீங்கள் இவ்விஷயத்தைப் புனராலோசனை செய்து, சரியான முடிவெடுப்பீர்கள் என நம்புகிறேன்.''

* * *

சர்தார் பட்டேலின் கடிதங்களை மட்டுமே தொகுத்தளிக்கிற நவஜீவன் பிரசுராலயத்தின் நூலில் இவ்விஷயம் பற்றி ஜவாஹர்லால் நேருவுக்கும், திரு ஜி. டி. பிர்லாவுக்கும் நிகழ்ந்த கடிதப் போக்குவரத்துக்கள் இடம் பெறாதது நியாயமே. ஆனால் மக்கள் அதையும் தெரிந்து கொள்ள வேண்டாமா? அப்போதுதானே உண்மை முழுவதும் வெளியாகும்? திரு ஜி. டி. பிர்லாவிடம் மட்டுமே உள்ள இக்கடிதப் போக்குவரத்தின் சாராம்சத்தை வாசகர்களுக்கு அளிக்கிறோம்.

1948 மே 7ந் தேதி பிரதமர் ஜவாஹர்லால் நேரு திரு ஜி. டி. பிர்லாவுக்கு எழுதிய கடிதத்தில் இதைப் பற்றிக் கூறுகிறார்:

''மத்திய சட்ட சபையில் சுமார் நூறு அங்கத்தினர்கள் (பிர்லா மாளிகையைத்) தேசிய உடைமையாக்கிவிட வேண்டும் என்று ஓயாமல் வற்புறுத்தி வருகின்றனர். இந்தப் பிரச்னையை இந்த முறையில் அணுகுவது சரியன்று என்பதே என் அபிப்பிராயம். அதனால் இதைப் பற்றி மறு விவாதம் நிகழாமல் பார்த்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் விருப்பத்துக்கு மாறாக நான் எதையும் செய்ய விரும்பவில்லை... நான் கூறும் யோசனையாவது: பிர்லா

படங்கள்: பிர்லா மாளிகையில் அண்ணல் உபயோகித்த அறையில் அவரது எளிய உடைமைகள்.

காந்திஜியின் புனித ஆவி பிரிந்த இடத்தில் நினைவுச் சின்னம்.

மாளிகைக் கட்டடம் முழுவதும் உங்களுடைய சொந்த உபயோகத்திலேயே இருக்க வேண்டும்; இதை வேறு ஒருவரும் தொடக் கூடாது. பூங்காவில் பாபு பிரார்த்தனை நடத்திய இடமும் அவர் சுட்டுக் கொல்லப்பட்ட இடமும் மட்டும் தோட்டத்தின் இதர பகுதிகளிலிருந்தும் மாளிகைக் கட்டடத்திலிருந்தும் தனியாகப் பிரித்து வைக்கப்பட்டு தேசிய சின்னமாக வேண்டும். அப்பகுதிக்குப் பொதுமக்கள் தடையின்றிப் போகவும் வரவும் வசதி செய்து விடவேண்டும். பூங்காவைக் கூடிய வரை மாற்றாமலே, அப்படியே வைத்திருப்பதுதான் விரும்பத் தக்கது. பாபுஜி சுட்டுக் கொல்லப்பட்ட இடத்தில் மட்டும் சுமார் மூன்றடி உயரத்துக்கு ஒரு சிறிய நினைவு ஸ்தம்பம் எழுப்பி, அந்த இடத்தின் புனிதத் தன்மையை விளக்கி வைக்க வேண்டும். மாளிகைப் பகுதியிலிருந்து இதைத் தனிப்படுத்தி ரஸ்தாவுடன் தனிப் பாதை மூலம் இணைத்துவிட்டால் பொதுமக்கள் போகவும் வரவும் சுலபமாக இருக்கும். மாளிகையையும் பூங்காவையும் எந்த இடத்தில் பிரிப்பது என்பதைப் பின்னர் நாம் நிச்சயித்துக் கொள்ளலாம். இப்போதைக்கு இம்மாதிரி அல்லது இது போல ஏதாவது செய்யலாமா என்பதுபற்றி உங்கள் கருத்தைச் சொல்லவும்.''

இதற்கு ஜி. டி. பிர்லா தந்துள்ள பதில் கல் மனத்தையும் நெகிழச் செய்யும். அவருடைய பணிவையும், உள்ளத் தூய்மையையும் பெருந் தன்மையையும் பாபுஜியிடம் அவர் கொண்டிருந்த அன்பையும் அதில் காணலாம். சில பகுதிகள் மட்டும் கீழே கொடுக்கப்படுகின்றன:

''உங்களுடைய விருப்பத்தையும் ஸர்தார் பட்டேலின் விருப்பத்தையும் நான் தயங்காமல் நிறைவேற்றக் காத்திருக்கிறேன். எனினும் என்னுடைய உணர்ச்சிகளையும் எடுத்துச் சொல்லவே விருப்பம். இல்லாவிடில் மனிதத் தன்மை அற்றவனாகவே நான் ஆவேன்.

''1932ம் ஆண்டில் முதல் தடவையாக இந்த மாளிகையை பாபுஜி தமது இருப்பிடமாகக் கொண்டார். பல பிரமுகர்கள் இங்கே தங்கியுள்ளனர்... பல ராஜீயப் பிரச்னைகள் இங்கே விவாதிக்கப்பட்டன. பல முக்கியமான தீர்மானங்கள் இங்கே எடுக்கப்பட்டன. காங்கிரஸ் முதல் மந்திரி சபை 1946ம்ஆண்டில் இங்கேதான் கூடிற்று. என்னுடைய சிறு வயதிலிருந்து என் வளர்ச்சியெல்லாம் இந்த இடத்தில்தான் நடைபெற்றது. இப்போது நான் முதுமைப் பருவத்தில் இருக்கிறேன். இந்தப் பூங்காவில் உள்ள ஒவ்வொரு செடியும், மரமும் நான் நட்டவை, என்னுடைய கையினாலும் நேரடிக் கண்காணிப்பிலும் வளர்ந்தவை. செடிகள் மரமாகி, பூத்துக் காய்த்துக் கனிந்ததை யெல்லாம் நான் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து வளர்ந்தேன். பூங்காவில் உள்ள ஒவ்வொரு மரத்தின் முழு வரலாற்றையும் தனித் தனியாக நான் அறிவேன். புஷ்பப் பாத்திகளை அமைத்து, பூஞ்செடிகளும் நானே நட்டு வளர்த்திருக்கிறேன். இவை அனைத்தும் என்னுடைய வாழ்க்கையுடன், இயற்கையாகவே இணைந்துள்ளன. எண்ணற்ற நினைவுகள் இவ்வீட்டுடன் இணைந்துள்ளன. இவற்றை நினைத்து நினைத்து நான் பெருமிதம் கொள்வேன். என்னுடைய உடல், மன வளர்ச்சிகளின் ஒவ்வொரு நரம்பும் சதையும் இம்மாளிகையுடன் பின்னிக் கிடக்கின்றன. தெருவோடு போகும் மனிதனுக்கு இவை விளங்காது. நீங்களும் சர்தார் அவர்களும் இவற்றை நன்ருகவே உணர்ந்திருக்கிறீர்கள் என்பதைக் கண்டு நான் மகிழ்கிறேன்.

''இம் மாளிகையை வலுக் கட்டாயமாகத் தேசிய உடைமையாக்கிவிட வேண்டும் என்று பல சட்டசபை அங்கத்தினர்கள் — சிலர் என் நண்பர்கள்கூட — சொன்னதும், பணம் கொடுத்தாகிலும் வாங்கிவிட வேண்டும் என்று சொன்னதும் எனக்குத் தெரியும். அவர்களுக்கு மனிதத் தன்மையின் மேன்மை துளிக்கூடத் தெரியவில்லை. இந்தப் பிரச்னை சந்தைக் கடை வியாபாரம் அல்ல என்பதை அவர்கள் எப்படி உணர்வார்கள்? அந்தப் புனித ஆத்மாவின் நினைவுக்கே இம்மாதிரியான ஓர் எண்ணம் மாசு கற்பிப்பதாகும். என்னையும் அவர்கள் மிகக் கேவலமான அற்பன் என்று எண்ணிவிட்டனர்? முப்பத்திரண்டு ஆண்டுகள் முழு மனத்துடனும் உள்ளத் தூய்மையுடனும் அந்த மகானுக்குத் தளராது நான் செய்து வந்த புனித சேவையைப் பணத்தைக் கொண்டு மதிப்பிடப் பார்ப்பது என்னை அவமானப்படுத்துவதே.

''உங்கள் விருப்பப்படி நான் நடந்து கொள்ளச் சித்தமாயிருக்கிறேன். ஆனல் ஒன்று மட்டும் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த மாளிகையைத் தனித் தனியாகத் துண்டு போடாதீர்கள். இதைவிட என்னுடைய குழந்தையை இரண்டாகப் பிளந்து 'ஒரு பாதியை நீ வைத்துக் கொள், மறு பாதியைக்கொடுத்து விடு' என்று சொல்லலாம். மாளிகையும் அதைச்

தேசத் தந்தையும் தளபதிகள் இருவரும்.





சத்து பரைலியில் ஒரு கோயில் எடுக்கும்படி ஆக்ஞையிட்டிருக்கிறார்! அந்தக் கட்டளையின் நிறைவேற்றத்தைத்தான் இங்கே காணும் அற்புத கோபுரமும் அழகனின் விக்கிரகமும் தெரிவிக்கின்றன. திருப்பதியில் வாழும் ஜகன் மோகன பாலாஜியின் பிரதிவாகவே நர ஆக்ருதியில் இந்த விக்கிரகத்தை வடித்திருக்கிறார் திரு கணபதி ஸ்தபதி அவர்கள்.

ஆலய கும்பாபிஷேகமும், மூல மூர்த்திப் பிரதிஷ்டையும் சுமார் ஒன்பது மாதங்களுக்கு முன்பு சாஸ்திரோக்தமாக வெகு சிறப்புடன் நிறைவேறின. பரைலியிலுள்ள இந்திய விமானப் படையினரும் மிருக வைத்திய ஆராய்ச்சி நிலையத்தினரும் தீவிர ஈடுபாட்டுடன் 'ஸ்ரீ வேங்கடேசுவர ஆலய நிர்மாண சமிதி' என்ற அமைப்பில் ஒன்றுகூடிக் கோயிலை எழுப்பிப்



# இன்னொரு திருப்பதி!

இந்திய விமானப் படையைச் சேர்ந்த திரு எம். பி. நாயுடு ஒரு கனவு கண்டார்.

திருப்பதி ஸ்ரீ வேங்கடரமண ஸ்வாமி தமக்குத் திரு நாயுடுவின் இருப்பிடமான உத்தரப் பிரதே

பரிபாலித்து வருகிறார்கள். ஆலய நிர்மாணம் முழுமை பெற இன்னும் பல கட்டிமான வேலைகளை முடித்தாக வேண்டியிருக்கிறது. வடநாட்டுக்குச் சென்றுள்ள இந்த வடமலையப்பனின் பெருமைக்

கேற்ப ஆலயமும் பெருக வேண்டியது அவசியமே. இந்தப் புண்ணியப் பணிக்கு ஆஸ்திகர்கள் அள்ளித் தந்து லக்ஷ்மிபதியின் அன்னக் குறையா அருள் நிதியைப் பெற வேணும். பொருள் அனுப்ப வேண்டிய முகவரி:

Shree Venkateswara Alaya
Nirmana Samithi, Behind
Izatnagar Police Station
Bareilly, Uttar Pradesh.

---

சார்ந்த இடம் முழுவதும் பாபுஜியின் புனித நினைவை உடையவை. இது முழுமையாக அந்த ஆத்மாவின் புனித நினைவாக இருப்பதையே நான் விரும்புகிறேன். ஒரு பகுதி மட்டும் அல்ல.''

பிர்லா மாளிகையைப் பிரதமரின் வாசஸ் தலமாக்கிக் கொள்வதாயின் அதனை நாட்டுக்குத் தமது அன்பளிப்பாக வழங்கிவிடவே தயாரா யிருந்தார் பெருமகனார் திரு பிர்லா. ஆனால் அதை உசிதமெனக் கருதாத ஜவாஹர்லால் நேரு, 1948 மே 22ம் தேதியிட்ட தமது கடிதத்தில் திரு பிர்லாவுக்குத் தமது யோசனையை மேலும் விளக்கியுள்ளார். மகாத்மாவின் நினைவுச் சின்னமாக விளங்க வேண்டும் என அவர் விரும்பியது பாபுஜி பிரார்த்தனை நடத்திய கோடைக்கால இல்லமும் அதைச் சுற்றிய நிலமும் மட்டுமே. இதை மற்ற மாளிகைப் பகுதியிலிருந்து தனிப்படுத்தி விடவேண்டும். பிர்லா மாளிகையைத் திரு ஜி. டி. பிர்லா முழுமையாகக் கொடுத்துவிட வேண்டும் என்பதல்ல அவர் விருப்பம். இந்தச் சிறிய புனித தலத்தைக்கூட விருப்பமிருந்தால் திரு ஜி. டி. பிர்லா கொடுக்கலாம் என்றுதான் நேருஜி ஆலோசனை கூறியுள்ளாரே தவிர நிர்ப்பந்தமாகவோ கட்டாயமாகவோ அல்ல. பிர்லா மாளிகை பிர்லாவின் குடும்பச் சொத்து என்பதையும், அத்துடன் ஜி.டி. பிர்லாவின் வாழ்க்கை நினைவுகள் இணைந்திருக்கின்றன என்பதையும் பண்டித நேரு பூரணமாக ஒப்புக் கொண்டிருக்கிறார். முடிவு செய்யும் உரிமையை அவர் பிர்லாவுக்கே விட்டு விட்டார்.

பிர்லா மாளிகைக்கு விஜயம் செய்துள்ள எவரும், பூங்காவுக்கு எல்லோரும் சுலபமாகச் செல்ல வசதி செய்து வைத்திருப்பதையும், காந்திஜி சுடப்பட்ட அந்தப் புனித இடத்தில் ஒரு சிறிய ஸ்தூபி அவருடைய நினைவாக எழுப்பப்பட்டிருப்பதையும், ஒரு புறத்தில் மகாத்மாவின் வாழ்க்கை வரலாற்றை வண்ண ஓவியங்களாகச் சுவரில் தீட்டியுள்ளதையும் காணத் தவற மாட்டார்கள். நேருஜி எவ்விதம் விரும்பினாரோ அப்படியே இவ்விஷயத்தை ஜி. டி. பிர்லா முடித்து வைத்துள்ளார்.

எல்லோருக்கும் திருப்தி அளிக்கும் வகையில், நேர்மையுடனும், நியாய உணர்வுடனும் நேருஜியினால் தீர்க்கப்பட்டுவிட்ட பிரச்னையை அவர் காலமான பல ஆண்டுகளுக்குப் பின் மறுபடியும் கிளறி, அவர் எடுத்த முடிவுக்கு நேர் மாறான முடிவை இன்றைய இந்திரா அரசு செய்திருப்பது நேர்மையும் மனிதத் தன்மையும் உள்ள எவருக்கும் துயர் உண்டாக்கும். அண்ணல் காந்தியடிகள் ஆதரிக்க மாட்டார் இந்தக் காரியத்தை.

# கதீஜா திரும்பிப்போ!



மழலைப் பள்ளியில் கல்விபயிலும் மாணவ மாணவிச் சிறுமிகளுக்கு மார்க்கக் கல்வி போதித்துக் கொண்டிருந்தேன். முஷ்தாக் பசீர் அலி, பர்வீன் பானு, தில்ஷாத் பானு, சலீம் எல்லோரும் வந்துவிட்டார்கள். சித்திர பீக்கா ஏன் இன்னும் வரவில்லை?

''அலிஃப், பே, தே ஃதே''—சின்னஞ் சிறிய அரும்புகள் ஏககாலத்தில் அரபி எழுத்துக்களை ஒரு சேர மனனம் செய்வதற்கு வாய்விட்டு ஓதிக் கொண்டிருந்தனர்.

''ஸக்கீனு, அல்லாவை எழுத்துக் கூட்டிச் சொல் ?'' என்று ஒவ்வொரு பாடத்திலும் இரண்டு மூன்று நாட்கள் பின்தங்கும் சிறுமி யிடம் கேட்டேன்.

''அலிஃப்லாம் சபர் அல்'லாம் அலிப் சபர்ஆ' அல்லா !''

''பரவாயில்லையே. சரியாகச் சொல்லிவிட் டாயே, ஆமா ஸக்கீனு உங்க வீட்டுக்கு எதிர்த்த வீட்டுச் சித்திரபீக்கா இன்னும் ஓத வரல்லியே.....நீ வரும்போது பார்க்க லாமா ?''

''நேத்து உங்களுக்குத் தெரியாதா ?''

''நேத்து என்ன?''

''ரபீக்கா வாப்பாவுக்கு நேத்து சுக மில்லே. வைத்தியர்களெல்லாம் வந்து பார்த்துட்டுப் போனாங்க......''

''அப்படியா? அப்போ அவருக்கு யார் கூட மாட இருக்கிறாங்க?''

''தெரியலீங்க. அவுங்க வாப்பாவைப் பெத்த அம்மாவுக்குக் கண் தெரியாது. பாவம், யார் கூட மாட இருக்காங்கன்னு தெரியல்லே.''

இதற்குள் குழந்தைகளை அழைத்துச் செல்ல மழலைப் பள்ளிக்கு வண்டிக்காரர்கள் வண்டிக ளுடன் வந்து விட்டனர்.

போர்டோ பெயரோ இல்லாத என் அரபிப் பாடசாலையிலிருந்து இளஞ் சிறார்கள் என் னிடம் விடைபெற்றுச் சென்றனர். ஏறக் குறைய முப்பத்தைந்து சிறுவர் சிறுமியர்கள் வரை ஓதும் பலகையையும், குர்ஆன் பிரதி யையும் தூக்கிச் செல்லும் அந்த ஒப்பற்ற காட்சியிலே வழக்கம்போல என் மனச் சுமைகளைக் கரைய விட்டேன்.

வரிசையாக நின்றிருந்த நான்கு ஒத்தை மாட்டு வண்டிகளில் சிறார்கள் ஏறிவிட்டனர். வண்டிகள் நகர்ந்தன. இனி இந்த இடம் களை கட்டப் பதினொரு மணி நேரம் காத்திருக்க வேண்டும். மாலை ஆறு மணிக்குத்தான் மாலைப் படிப்புக்கு வருவார்கள்.

சித்திரபீக்கா! என் இதய மேடையில் தோன்றுகிறாள். புறுக் கண் தாவணியில் முக்காடிட்டு டிஷ்ஷூர் பாவாடையும் சட் டையும் தரித்துப் பின்னலிட்ட சிறிய கூந்த லிலே கனகாம்பரம் பூச்சூடி மையிட்ட கண் ஓரத்தில் திருஷ்டிப் புள்ளி வைத்து வருகிறாள். அவளை அழைத்து வரும் மூதாட்டி ஓதும் பலகையைச் சுமந்து வருகிறாள். இப்படித் தான் முதன் முதலில் சித்திரபீக்கா என்னிடம் வந்தாள் — மார்க்கக் கல்வி பயில்வதற்கு.

என்னிடம் கல்வி பயிலும் மாணவச் சிறார்கள் ஆண் பெண் இரு பாலாரும் என்னை ''அம்மா!'' என்றே அழைப்பார்கள். அவர் களில் சித்திரபீக்கா 'அம்மா' என்று என்னை அழைக்கும்போது அதில் ஒரு வகைப் பாசம் பீறிடுவதை — உணர்ச்சிகள் கொந்தளிப்பதை, அன்பு மிளிர்வதை என் உள்ளம் உணராமல் ஒருநாளும் இருந்ததில்லை. அது ஏன் ?

முன்பொரு நாள் அந்தப் பேதைச் சிறுமி ஓதுவதற்கு வரவில்லை. அத்தனை மாணவமணி களிலும் சித்தி ரபீக்கா வரவில்லை என்றால் என் உள்ளம் நிலை கொள்ளாது தவியாய்த் தவிக்கும். அவளுக்கு என்னமோ ஏதோ என்று குழம்பித் துயருறும். அது ஏன்?

இருபது வருடங்களுக்கு முன்னால்... நான் கல்யாணப் பெண். எனக்கு அப்போது பத்தொன்பது வயது. தோழியர் குழு என் னைச் சோடித்தபோதும், கபசோபனம் கூறிய போதும் என் உள்ளம் அடைந்த ஆனந்தத் துக்கு எல்லைக் கோடே கிடையாது. என் எதிர் காலம் இப்படியே மணம் நிறைந்ததாய் இருக்கும் என்று எண்ணி யிருந்தேன்.

முப்பதாவது வயதில் கணவன் உயிரோடு இருக்கும்போதே விதவையானேன். முறைப் படி இரை மறைவு (இத்தா) வாழ்க்கை வாழ்ந்து மாங்கல்யம் இழந்து — மங்களமும் இழந்து ஒருவித விரக்தி நிலையில் வாழலா னேன். காரணம்?

என் உதரத்தில் மதலை உதிக்க வாய்ப்பில்லை என்று மருத்துவ உலகம் கூறிய தீர்ப்பு.

அதைத் தொடர்ந்து கல்லிடைக்குறிச்சி பஞ்சாயத்தும் வகையுள்ள என் கணவரின் விவாக ரத்தைச் சிரமேல் ஏற்றது.

என்னைச் சேர்ந்தவர்களை வைத்து வாதாடினேன். பிள்ளைப் பேற்றுக்காக மறு மணம் செய்து கொள்ளட்டும். நான் ஆட்சேபிக்கவில்லை. அதற்காக என்னை விவாக ரத்து செய்துவிட வேண்டாம், ஒதுங்கி வாழ்கிறேன் என்று. என் குறிக்கோள் ஏற்கப்படவில்லை.

முத்தலாக்! (மூன்று தடவை 'தலாக்' என்று கூறுவதற்குப் பதில் ஒரே முறை முத்தலாக் என்று கூறினால் போதும்.)

அந்தப் பஞ்சாயத்தார் முன்னிலையிலேயே எனக்குச் சேர வேண்டிய மஹர் தொகை— என் தாய் வீட்டில் அளித்த சீதனம் யாவையும் பைசா வித்தியாசம் இல்லாமல் திருப்பி அளித்து விட்டார்.

அழுது அழுது என்னை அழிக்க முயன்று தோல்வியே கண்டேன்.

'அன்பே, அமுதே, குமுதமே, கோமேதகமே' என்றெல்லாம் மயக்குமொழிகளால் பேசி இன்ப லாகிரி ஊட்டிய என் கணவர் மறு மணம் செய்யப் போகிறார் என்று அவர் வீட்டுப் பந்தலில் கட்டியிருந்த ஒலிபெருக்கி ஊராருக்குப் பறைசாற்றிக்கொண்டிருந்தது.



கருணை மணாளன்

என்ன நினைத்தும் என்னால் அந்தச் சுந்தர நினைவுகளை மறக்க முடியவில்லை. உளியால் கொத்திய கல் அம்மியின் வடுக்களைச் சாக்கட்டியால் தேய்த்து அழிக்க முயலும் சிறுமியைப்போல் இருந்தது என் முயற்சி. அதை மறக்க மறக்கப் பசுமை பெற்று என்னை ஆட்டிப் படைத்தது.

ஒலிபெருக்கியின் ஓலம் — விருந்தைப் பற்றி ஊராரின் விமரிசனம் எல்லாம் ஓய்ந்த பிறகு தான் என் இதயமும் சற்று சாந்தியடைந்தது.

கல்லிடைக்குறிச்சியில் குழந்தைகளுக்கு மார்க்கக் கல்வி போதித்துக் கொடுத்த பிரபல மஸ்தான் பாத்தும்மாள் பெத்தா காலமாகி விட்டதால் அவர்களிடம் நான் சிறு வயதில் நன்றாய்த் தேர்ச்சி பெற்றதை வைத்து என்னை அந்தப் பணியை மேற்கொள்ளும்படி ஊரிலுள்ள நல்லவர்கள் சொன்னார்கள்.

நானும் அந்தக் கடமையை ஏற்றேன். கைநிறையச் சம்பளம் குவிகிறது. அது மட்டுமா? 'அம்மா' என்று அழைக்க ஒரு பிள்ளை இல்லையே என்று ஏங்கினேன். நான் பெறுவிட்டாலும் என்னை 'அம்மா' என்று அழைக்கும் பல அரும்புகளின் குரலில் என்னையே மறந்தேன்.

பெட்ரோலியம், நிலக்கரி எதுவுமே இல்லாமல் துரித வேகத்தில் காலச் சக்கரம் சுழன்றது. சித்திர பீக்கா என்னிடம் ஓதுவதற்கு வந்து சேர்ந்தாள்.

யார் இந்தச் சித்திரபீக்கா? என்னை விவாகரத்து செய்தவரின் — முத்தலாக் கூறி அப்பீலில்லாமல் என்னை விதலையாக்கியவரின் அருமந்த புத்திரி. ஆம்! எனக்குப் பிறகு வாழ்க்கைப்பட்டவளின் முதல் குருத்து!

முதலில் அந்தச் சிறுமியை நான் ஏற்கக் கூடாது என்றுதான் எண்ணி யிருந்தேன். 'கற்றவர்கள் தாங்கள் கற்றதோடு நின்றுவிடாமல் தாங்கள் கற்றதைப் பிறருக்கும் போதிக்க வேண்டும்' என்பது தான் பொது நியதி அல்லவா? அந்த அரும்பை நான் பெறுவிட்டாலும் என் சகோதரி ஒருத்தி பெற்றதுதானே! எனவே அந்தச்



சித்திர பீக்காளை விசேஷமாகக் கவனித்து ஓதிக் கொடுத்து வந்தேன். ரபீக்காவும் நன்ருக ஓதி வந்தாள்.

அன்றொரு நாள் ரபீக்கா ஓத வரவில்லை. காரணம் கேட்டபோது நான் பெரிதும் அதிர்ச்சிக்குள்ளானேன். ரபீக்காவின் தாய் காலமாகி விட்டாளாம்.

ஒரு வாரம் கழித்து என் மதரஸாவுக்கு ரபீக்கா ஓத வந்தபோது அந்த மலர் மொட்டைக் கட்டி அணைத்து அழுததை நினைக்கும் போது ... நினைக்கும்போது .... இ ப் ப வு ம் இதயம் விம்மித் தணிகிறது.

''என்னம்மா அப்படியே உட்காந்துட்டீங்க?'' ஸக்கீனு என்னைச் சுய நினைவுக்குக் கொண்டுவர முயன்றுள்.

''அவுங்க வாப்பாவுக்கு என்ன செய்யுதாம்?'' என்று கேட்டேன்.

''ஆஸ்த்துமாவாம்.''

''ஆஸ்த்துமாவா?''

''ஏனம்மா அப்படிக் கேக்குறீங்க?'' என்று ஸக்கீனு வியப்புடன் கேட்டாள்.

அவருக்கு இப்படி அடிக்கடி பனிக் காலத்தில் ஆஸ்துமா தொந்தரவு கொடுக்கும். இதை அடியோடு ஒழிக்க வேண்டு மென்று எத்தனையோ பக்குவங்கள், வைத்தியங்கள் செய்தும் பலன் தரவில்லை. இந்தச் சிகிச்சைக்காகச் சென்னை சென்று விட்டு வரும் போது பறங்கிப்பேட்டையில் சற்குரு வைத்தியசாலை நடத்தி வரும் ஒரு யூனனி ஹக்கீம் ஏதோ ஒரு பவழ பஸ்பம் என்று வெள்ளைச் சூரணம் மூனு பொட்டலம் தந்தார். மூன்றே வேளையில் குணமாகி விடும் என்றூர்.

அந்த பஸ்பம் ஹக்கீம் சொன்னபடி வேலை செய்தது. பத்து வருட இடைவெளியில் இரண்டு பொட்டலங்கள் தீர்ந்து விட்டன. அடிக்கடி தொந்தரவு செய்த அந்த ஆஸ்த்துமா இரண்டு பொட்டல பஸ்பத்தில் ஏறக்குறைய இருபது வருடங்களாக வரவில்லை. இன்று வந்துவிட்டது. அந்த பஸ்பத்தைச் சுடு தேனில் குழைத்து இன்னும் ஒரு தடவை கொடுத்து விட்டால் அவர் ஆயுள் உள்ள வரையில் ஆஸ்துமா அவரை அண்டாது.

ஆனல் அந்த பஸ்பத்தின் மூன்ருவது பொட்டலம் என்னிடம் இருந்தது. அது மட்டுமல்ல. அந்த ஹக்கீம் அனுப்பியிருந்த தேன் புட்டியும் இருந்தது. அன்று தந்த தல்ல. என் தேவைக்காக எனக்கு நான் சமீபத்தில் வரவழைத்திருந்த தூய தேன்.

உயிருக்கு மன்ருடும் என் மாஜிக் கணவருக்கு இந்த பஸ்பத்தை எப்படிக் கொடுப்பேன்? என் உடைமைகளைப் பஞ்சாயத்தார் முன்னிலையில் ஒப்படைத்தபோது என் பெட்டிக்குள் பத்திரப்படுத்தியிருந்த பஸ்பமும் சேர்ந்து வந்து விட்டதை எப்படி அவர் அறிந்திருக்க முடியும்?

இரண்டாவது மனைவி காலமாகிவிட்டாள். பெற்ற அன்னைக்கோ பார்வை தெரியாது. இந்நிலையில் அவர் பஸ்பத்தை எங்கே போய்த் தேடுவார்? பக்குவப்படி இந்த பஸ்பத்தைத் தேனில் குழைத்து அவருக்கு ஊட்டுபவர் யார்?

இப்போதைக்கு அதற்கு என்னைத் தவிர வேறு யாருமே இல்லை.

பெட்டியைத் திறந்தேன். தேன் புட்டியுடன் கடைசிப் பொட்டலத்தையும் எடுத்தேன். சென்றேன், ஓட்டமும் நடையுமாக.

''கதீஜா, நில்! நில் கதீஜா, நில்!''

என் மனம் ஏன் என்னைத் தடுத்து நிறுத்துகிறது? கால்கள் ஏன் இப்படி ஸ்தம்பித்து நிற்கின்றன?

கைத்தடி ஊன்றி, ஒளரங்கஜேப் தலைப்பாகை கட்டி வெள்ளிப் பிரேம் மூக்குக் கண்ணுடி அணிந்து தள்ளாடித் தள்ளாடித் தலையாட்டி வரும் எண்பது வயது மூசா ஆலிமைக் கண்டா நான் இப்படி நின்றுவிட்டேன்?

என்னை அவர் அடையாளம் கண்டுகொண்டார். ''யாரம்மா, கதீஜாவா, நீ?''

''ஆமாம், ஹஸ்ரத்!''

''பிள்ளைங்களுக்கு நல்லபடியா ஓதிக் குடுக்கிறியாம்மா நீ?''

''ஆமாம், ஹஸ்ரத்!''

''என்னமோம்மா நீ நம்ம புள்ளைங்களுக்கு நல்லா ஓதிக் குடும்மா! அதுகள் விளையாட்டுப் பராக்கில் இருந்தாலும் நீதானம்மா திருத்தி எடுக்கணும். பெத்தவங்களாலே செய்ய முடியாத பணியம்மா அது! அது சரி, இப்போ எங்கே போறே, இப்படி அவசரமா?''

''உங்களுக்குத் தெரியாதா ஹஸ்ரத்! நம்ம ரஹ்மத்தம்மா மகன்... தெரியுமில்லே.... அவுங்களுக்கு ஆஸ்துமாவாம். ரொம்பக் கஷ்டப்படறுங்களாம். உயிருக்கு ஆபத்தாம்...''

''அதனுலே?''

''அதனுலே என்வசம் அதை அடியோடு ஒழிக்கும் ஒரு பஸ்பம் இருக்கிறது. அதைக் கொண்டு போய், என் கையால்...''

நான் முடிக்கவில்லை. மூசா ஆலிம் குறுக்கிட்டார். ''மூடு வாயை! அவன் உன்னை மூத்தலாக் சொல்லி விவாக ரத்து செய்தவன் என்பதை மறந்து விட்டாயா? அப்படிப்பட்ட நீசனுக்கு — உன்னை வாழாவெட்டியாக்கி விட்ட அந்த அற்பனுக்கு உதவவா இப்படி ஓடுகிருய்? வேண்டாம்! திரும்பிப் போ கதீஜா! திரும்பிப் போ!''

''இல்லை. நான் திரும்பப் போவதில்லை. எப்படிப்பட்ட எதிரியாக இருந்தாலும் ஆபத்து நேரத்தில் உயிருக்கு மன்ருடுகையில் உதவுவதுதான் மனிதாபிமானத்துக்கு அழகு. நான் அவருடைய மாஜி மனைவி என்ற முறையில் போகவில்லை. அவருக்குச் சிகிச்சை செய்யும் நர்ஸ் என்ற முறையிலாவது போக அனுமதி உண்டு அல்லவா? இந்த பஸ்பத்தைப் பக்குவமாக அவருக்குக் கொடுத்துவிட்டு எந்த ஒரு பிரதி உபகாரமும் பெறுமல் நான் திரும்பி விடுகிறேன். பாவம், ரபீக்கா ஒரு தாயில்லாத பெண். அவள் தந்தையில்லாத ஒரு எத்தீமாகிவிடக் கூடாது என்பது என் ஆசை. அனுமதியுங்கள் ஹஸ்ரத்!''

என் வேண்டுகோள் ஆலிமின் இதயத்தை இளக வைத்து விட்டது.

''அந்தப் பஸ்பத்தை இப்படிக் கொடு. நானே கொண்டு போய்க் கொடுக்கிறேன்'' என்று கையை நீட்டினர்.

பஸ்பத்தை ஆலிமிடம் நீட்டினேன். நடுங்கும் என் கரம் சரியாக மடிக்கப்படாத அதைச் சரிவர அவர்களிடம் சமர்ப்பிக்காததால் பொட்டலம் கீழே விழுந்து, பிரிந்து பஸ்பம் காற்ருேடு கலந்து பறந்தது!

## பயமுறுத்தும் அஜீரணமா?
## உடன் நிறுத்த ஹ்யூலட்ஸ் மிக்ஸ்சர் அருந்துங்கள். மீண்டும் முன்போல் சாப்பிடத் தொடங்குங்கள்!

அஜீரணத்தை அசட்டை செய்தால் பசியை மட்டுமின்றி பொறுமையையும் இழந்து விடுகிறீர்கள். சிடுசிடுப்பும், எரிச்சலூட்டும் வலியும் ஏற்படுகின்றன.

ஹ்யூலட்ஸ் மிக்ஸ்சர் அருந்துங்கள். வெகுவிரைவில் அது அமிலங்களைச் சமனப்படுத்தி உங்கள் வயிற்றுக்குப் பாதுகாப்பளிக்கிறது. வலியைப் போக்கி எல்லாவித அஜீரணங்களிலிருந்தும் முழு நிவாரணம் அளிக்கிறது.

வயிற்றுக் கடுப்புக்கு ஓபியம் கலந்த ஹ்யூலட்ஸ் மிக்ஸ்சர் கேட்டு வாங்குங்கள்.




**C. J. ஹ்யூலட் அண்ட் சன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்**

சென்னை 600002, கல்கத்தா 700001

SAA/CJH/1192

# சிவகாமியின் சபதம்

### இருபதாம் அத்தியாயம்

## குண்டோதரன் கதை

குண்டோதரன் குதிரையிலிருந்து குதித்து இறங்கி வந்து, சாலையில் நின்ற ஆயனரின் பாதங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். பின்னர் எழுந்து நின்று, ''ஐயா! என்னை ஆசீர்வாதம் செய்யுங்கள். தங்களுடைய திருவருளினாலேதான் நான் உங்களைத் தேடிக் கண்டு பிடித்தேன்!'' என்று சொன்னான்.

''ரொம்ப சந்தோஷம், குண்டோதரா! நீ தேடிக் கொண்டு வந்து சேர்ந்ததிலே எனக்கு வெகு சந்தோஷம். ஆனால், உன்னைக் கைவிட்டு விட்டு நாங்கள் வந்துவிடவில்லையே? நீ அல்லவா திடீரென்று எங்களைக் கைவிட்டு விட்டு மாயமாய் மறைந்து விட்டாய்? எங்கே அப்பா போயிருந்தாய்?'' என்று ஆயனர் கேட்கக் குண்டோதரன், ''குருவே! நான் என்ன செய்வேன்! காஞ்சியிலிருந்து அன்றைக்கு ரதம் ஓட்டிக் கொண்டு கண்ணபிரான் வந்தானல்லவா? அவன் ஒரு சமாசாரம் சொன்னான். என் பாட்டி எனக்குக் கல்யாணம் பண்ணி வைப்பதற்காகப் பெண் பார்த்து வைத்திருக்கிறாள் என்றும், உடனே வரச் சொன்னாள் என்றும் தெரிவித்தான். அப்புறம் காரியம் மிஞ்சிவிடப் போகிறது என்று உடனே போய்ப் பாட்டியிடம் கல்யாணம் வேண்டாம் என்று சொல்லி விட்டு வருவதற்காகக் காஞ்சிக்கு ஓடினேன். உங்களிடம் சொல்லிக் கொண்டு போகலாமென்று பார்த்தால், வீட்டில் உங்கள் இரண்டு பேரையும் காணவில்லை. ஒரு வேளை தாமரைக் குளக் கரையில் இருப்பீர்களோ என்று ஓடிப் போய்ப் பார்த்தால் அங்கேயும் உங்களைக் காண



வில்லை. இந்தப் புத்த பிக்ஷுதான் தாமரைக் குளக் கரையில் நின்று கொண்டிருந்தார்...'' என்று சொல்லிக் குண்டோதரன் நாகநந்தி அடிகளை ஏறிட்டுப் பார்த்தான்.

''என்னைச் சொல்கிறாயா தம்பி! இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தில் உள்ள புத்த பிக்ஷு நான் ஒருவன்தானா? வேறு யாரையாவது பார்த்திருப்பாய்!'' என்றார் நாகநந்தி அடிகள்.

''இல்லை, சுவாமி! இல்லை. தங்களைத் தான் பார்த்தேன். கையிலே ஏழெட்டு ஓலைச் சுருள்களை வைத்துக் கொண்டு, ஓர் ஓலையைப் படித்துக் கொண்டிருந் தீர்கள். நாகப் பாம்பு சீறுவதைப் போல் சிரித்துக் கொண்டிருந்தீர்கள்...''

சிவகாமியின் மனத்தில் அப்போது சுருக்கென்றது. மரப்பொந்திலே அவள் வைத்திருந்த மாமல்லரின் ஓலைகள் காணாமற் போனது அவளுக்கு நினைவு வந்தது.

அப்போது, நாகநந்தி, ''என்ன அப்பா உளறுகிறாய்? நானாவது தாமரைக் குளக்கரையில் நின்று ஓலை படிக்கவாவது?'' என்றார்.

வைத்துக் கொண்டு என்ன சிற்ப வேலையைச் செய்வது? அதனால்தான் எட்டு மாதமாக நான் ஒன்றும் செய்யவில்லை. போகட்டும், குண்டோதரா! அப்புறம் உன் கதையைச் சொல்லு! உன் பாட்டி பேசி வைத்த பெண்ணின் கதி என்ன?'' என்றார்.

''குருவே! பாட்டியிடம் கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டேன். 'பாட்டி, பாட்டி! நம்முடைய மகேந்திரச் சக்கரவர்த்தியின் குமாரர் மாமல்லர் எத்தனையோ ராஜாக்கள் பெண் கொடுப்பதாக வந்தும் இன்னும் கல்யாணம் பண்ணிக் கொள்ளாமல் பிரம்மசாரியாயிருக்கிறார். என் குருநாதருடைய செல்வப் புதல்வி சிவகாமிக்கு இன்னும் கல்யாணமாக வில்லை. அவர்கள் எல்லாம் அப்படி இருக்கும்போது எனக்கு மட்டும் கல்யாணம் என்னத்திற்கு, பாட்டி? நீ மட்டும் வேணுமானால் கல்யாணம் பண்ணிக் கொள்; நான் கிட்ட இருந்து நடத்துகிறேன்' என்று சொன்னேன்.''

குண்டோதரன் இவ்வாறு கூறியதும், எல்லோரும் கொல்லென்று சிரித்துவிட்



ஆயனரும், ''வேறு யாராகவாவது இருக்கும் குண்டோதரா! அப்புறம் உன் கதையைச் சொல்!'' என்றார்.

''இல்லை, குருவே, இவரையேதான் பார்த்தேன். இவருடைய முகத்தையும் இவர் சிறுவதையும் பார்த்ததும் எனக்கு என்ன தோன்றியது தெரியுமா? — ஆ! அதைச் சொல்லக் கூடாது. சொன்னால் பிக்ஷுவுக்குக் கோபம் வரும். கோபம் வந்து என்னைக் கடித்தாலும் கடித்து விடுவார்!'' என்றான்.

நாகநந்தியின் கண்களில் தீப்பொறி பறந்தது. ஆயனரோ நிலைமை விரசமாய்ப் போய்க் கொண்டிருப்பதை உணர்ந்து, ''பாருங்கள், சுவாமி! இப்பேர்ப்பட்ட புத்திசாலி சிஷ்யனை

டார்கள். சிவகாமியின் அத்தையும் கூடச் சிரித்துவிட்டு, ''என்னத்திற்காகச் சிரிக்கிறீர்கள்?'' என்று சிவகாமியைக் கேட்டாள்.

''குண்டோதரனுக்குக் கல்யாணமாம்!'' என்றாள் சிவகாமி.

ஆயனர், ''சரி, தம்பி! நாங்கள் இங்கே கிளம்பி வந்தது உனக்கு எப்படித் தெரிந்தது?'' என்று கேட்டார்.

குண்டோதரன் சொல்கிறான்: ''குருவே! பாட்டியிடம் அவசரமாகச் சொல்லிவிட்டு ஓட்டம் ஓட்டமாய் நம் வீட்டுக்கு வந்து பார்த்தால், வீடு பூட்டிக் கிடந்தது! 'நம்முடைய குருநாதரே நம்மைக் கைவிட்டுவிட்டார். இனி மேல் கடவுள்தான் நமக்

குத் துணை' என்று தீர்மானித்து அப்படியே மரத்தடியில் படுத்துத் தூங்கிப் போய் விட்டேன். அப்போது பாருங்கள்! கடவுளே பார்த்து அனுப்பியது போல் நம் குமார சக்கரவர்த்தி

''அப்புறம்!'' என்றார் ஆயனர்.

''அவர்களுக்குப் பின்னால் இன்னும் பல குதிரை வீரர்கள் வந்தார்கள். கண்ணபிரான் ரதம் ஓட்டிக் கொண்டு வந்தான்.....''



யும் புதிய தளபதி பரஞ்சோதியாரும் அங்கே வந்து சேர்ந்தார்கள்!''

''யார் வந்தது?'' என்று ஆயனர், சிவகாமி இரண்டு பேரும் ஏககாலத்தில் கேட்டார்கள்.

''மாமல்லரும் தளபதி பரஞ்சோதியாரும் வந்தார்கள். குதிரை மேல் வந்தார்கள்! ஆகா! குதிரை என்றால் அது வல்லவா குதிரை.....!''

''சரி, அப்புறம் என்ன நடந்தது?'' என்றார் ஆயனர்.

**மா**மல்லர் வந்தார் என்று கேட்டதும் சிவகாமிக்குத் தலை சுற்றியது. தேகமெல்லாம் நடுங்கியது. என்னவெல்லாமோ கேட்க வேண்டுமென்று உள்ளம் துடித்தது. உதடுகளும் துடித்தன.

எனினும், ''யார் வந்தது?'' என்று கேட்டதற்குப் பிறகு அவளுடைய வாயி

லிருந்து வார்த்தை எதுவும் வரவில்லை. ஆனால், விஷயத்தைச் சொல்லாமல் குண்டோதரன் என்னவெல்லாமோ சொல்லிக் கொண்டிருந்ததில் அவளுக்குக் கோபம் கோபமாய் வந்தது.

குண்டோதரன் சொல்கிறான்: "குருவே! வீடு பூட்டிக் கிடந்ததைக் கண்டதும் எனக்கு எவ்வளவு கோபம் வந்ததோ அதைவிட மூன்று மடங்கு கோபம் நம் குமார சக்கரவர்த்திக்கு வந்துவிட்டது. மாமல்லர் குதிரையைத் திருப்பிவிட்டுக் கொண்டு போன வேகத்தைப் பார்க்க வேண்டுமே? அடேடே அப்பா! நம் குமார சக்கரவர்த்திக்கு மூக்குக்கு மேல் இவ்வளவு கோபம் வரும் என்பது எனக்குத் தெரியவே தெரியாது. குமார சக்கரவர்த்தியின் குதிரை திரும்பியதும், மற்றக் குதிரைகள் சடசட என்று திரும்புவதற்குப் பட்டபாட்டைப் பார்க்க வேண்டுமே.... என்ன அவசரம்? என்ன தடபுடல்....? நான்



கண்ணைக் கசக்கிக் கொண்டு எழுந்து மரத்தின் பின்னாலிருந்து வெளியே வருவதற்குள்ளே அவ்வளவு குதிரைகளும் காற்றாய்ப் பறந்து மறைந்துபோய் விட்டன....."

சிவகாமியின் உள்ளத்தில் அப்போது மகிழ்ச்சி, பயம், கோபம், கவலை முதலிய உணர்ச்சிகள் ததும்பி, புயற் காற்று அடிக்கும் போது சமுத்திரம் கலங்குவது போல் கலங்கச் செய்து கொண்டிருந்தன.

மாமல்லர் தன்னைத் தேடி வந்தார் என்பதில் மகிழ்ச்சி; அவருக்கு வந்த கோபத்தைக் கேட்டதில் பயம்; அவர் வருவதற்கு முன்னால் இளம்பும்படி செய்த நாகநந்தியின் மேல் கோபம். செய்த தவற்றை எப்படித் திருத்துவது என்பது பற்றிக் கவலை — இப்படிப்பட்ட பலவகை உணர்ச்சிகளுக்கு இடையே ஒரே ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்ள அவளுக்கு ஆவல் துடிதுடித்தது.

ஒருவாறு நெஞ்சை உறுதிப்படுத்திக் கொண்டு, "அப்பா! குண்டோதரன் சொல்வது எனக்கு நிஜமாகத் தோன்றவில்லை. குமார சக்கரவர்த்தியாவது, நம் வீட்டுக்கு வரவாவது? அவர்தான் யுத்தத்துக்குப் பயந்து கொண்டு கோட்டையில் ஒளிந்து கொண்டிருந்தாரே!" என்றாள்.

ஆயனர் அதற்கு மறுமொழி சொல்லத் தெரியாதவராய், குண்டோதரனைப் பார்க்க, அவன், "குருவே! இப்படிப்பட்ட நாராசமான வார்த்தைகள் சிவகாமி அம்மையின் வாயிலிருந்துதானா உண்மையில் வெளிவந்தன? வீராதி வீரரான மகாமல்லராவது, யுத்தத்துக்குப் பயந்து கோட்டையில் ஒளிந்து கொண்டிருக்கவாவது? இப்பேர்ப்பட்ட கொடிய அவதூறை எந்தப் பாவி சிவகாமி அம்மையின் காதில் போட்டது? சக்கரவர்த்தியின் கட்டளைக்காக அல்லவா மாமல்லர் இத்தனை நாளும் கோட்டைக்குள்ளே இருந்தார்? சக்கரவர்த்தியின் ஆக்ஞை வந்தவுடனே மாமல்லர் நேரே போர்க்களத்துக்கல்லவா புறப்பட்டுப் போகிறார்?" என்றான்.

"போர்க்களத்துக்கா? எந்தப் போர்க்களத்துக்கு?" என்று ஆயனர் கேட்க, "தெரியாதா, குருவே? நாடு நகரமெல்லாம் அறிந்த விஷயமாயிற்றே? மகேந்திர சக்கரவர்த்தி வடபெண்ணைக் கரையில் முடக்கப்பட்டிருக்கும் தைரியத்தினால், கங்க நாட்டுத் துர்விநீதன் காஞ்சியின் மேல் படை எடுத்து வரும் செய்தி தங்களுக்குத் தெரியாதா? அவனையும் அவனுடைய படையையும் எதிர்த்துத் துவம்ஸம் செய்வதற்குத்தான் மாமல்லர் திருக்கழுக் குன்றத்திலிருந்த நமது தற்காப்புப் படையுடன் போயிருக்கிறார். சற்று முன்னால், இந்தச் சாலையில் ஒரு படை போயிற்றே, நீங்கள் பார்க்கவில்லையா? அந்தப் படை தென்பெண்ணைக் கரையிலேயே காவலுக்கு இருந்த படை; போர்க்களத்துக்குப் போகும் மாமல்லருடனே சேர்ந்து கொள்ளத்தான் போகிறது. இதையெல்லாம் நீங்கள் தெரிந்து கொள்ளவில்லையா?" என்றான் குண்டோதரன்.

வெகு சாதுவாகவும், பேசவே தெரியாத மந்தனாகவும் இத்தனை நாளும் தோன்றிய குண்டோதரன் இப்போது இவ்வளவு வாசாலகனாய் மாறியிருந்தது ஆயனருக்கு ஒரே ஆச்சரியத்தை அளித்தது. அவனிடம் இன்னும் ஏதோ அவர் கேட்கப் போனார். அந்தச் சமயம்

இவளுக்குத் தெரியும்:

அஸல் சிங்கார் (Shingar) குங்கும
ஜாடிக்கும் போலிக்கும் உள்ள வித்தியாசம்.

**உங்களுக்குத் தெரியுமா?**

எளிதில் கண்டுகொள்ளலாம்—ஒவ்வொரு ஜாடியிலும்
இதுபோல் சிங்கார் (Shingar) என்ற பெயர் உள்ளது.

● அஸல் சிங்கார் குமகும் உங்கள் முகததிற்குக் கெடுதல் செய்யாது. எரிச்சலூட்டாது: ● அதில் அடங்கிய பொருள் ஒவ்வொன்றும், மருந்துக் கட்டுப்பாடு அதிகாரிகளால் அங்கீகரிக்கப் பட்டது. ● உற்பத்தியின் ஒவ்வொரு கட்டத்திலும் கண்டிப்பான தா நிர்ணயக் கட்டுப்பாடு—தீவிரமான விஞ்ஞான முறைப்படி தயாரிக்கப்பட்டது. ● எந்த உடைக்கும், எந்த உளகிலேக்கும் பொருந் தும், சொக்கும் அழகுள்ள பல விதமான சாயல்கள். சிங்கார் குங்கும—பாரத நாட்டின் பேரழகு திலகம்.

பாரமவுண்ட் பிராடக்ட்ஸ்,
பம்பாய்-400 004




**Shingar**
குங்கும

everest/732/SP/tm

# “வறுத்து அரைத்த காபியைப்போல் அபாரமான ருசி”

(விலையும் அதைவிட அதிகமில்லை)

ஒரு மாதமாக நாங்கள் அருந்தி வந்தது ப்ரு என்பதை நம்ப மறுக்கிறார் என் கணவர். அதைவிட அதன் நயமான விலைதான் அவரை அதிக ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

## ஒவ்வொரு கப் ப்ருவுக்கும் வறுத்து அரைத்த சிறந்த காபியின் விலையைவிட அதிகமில்லை

தலைமுறை தலைமுறையாக நாங்கள் காபித்தூளையே உபயோகித்து வருகிறோம்.

இப்பொழுது இன்ஸ்டன்ட் காபிகளில் ப்ரு ஒன்றையே விரும்பி சாப்பிடுகிறோம். ஏனென்றால், ப்ருவின் ருசி சிறந்த காபியின் ருசியே தான். ப்ரு ஸ்ட்ராங்கானது, திடமானது, சிறந்த மணம் கொண்டது.

அவசரத் தேவைக்கு ப்ரு ரொம்பவும் சௌகரியமானது. ஆறின டிகாக்ஷனை சூடு பண்ண வேண்டியதில்லை. சேதமுமில்லை. மிகச் சிக்கனமானது. சுமார் மூணேகால் ரூபாய்க்கு 80 கப்புக்குமேல் ஸ்ட்ராங் காபி கிடைக்கிறது.

இன்ஸ்டன்ட் காபிகளில் நிகரற்றது ப்ரு.

## ப்ரு ருசி சிறந்த காபியின் ருசி




OBM 33018/3TAM

நாகநந்தி கலக்கமடைந்த குரலில், "ஆயனரே! நன்றாய் இருட்டிவிட்டதே? மிச்ச வழியையும் கடந்து இரவு தங்குவதற்கு அசோகபுரிக்குப் போய்விட வேண்டாமா! குண்டோதரன் நம்முடன் வருகிறானே, எல்லா விவரங்களும் சாவகாசமாய் அவனிடம் கேட்டுக் கொண்டால் போகிறது!" என்றார்.

உண்மையிலேயே அப்போது நன்றாய் இருட்டிவிட்டிருந்தபடியால், நாகநந்தியின் முகத்தை யாரும் நன்றாய்ப் பார்க்க முடியவில்லை. பார்க்க முடிந்திருந்தால், அந்தக் கோரமான முகம் அப்போது இன்னும் எவ்வளவு சர்வ கோரமாகியிருக்கிறதென்று அறிந்து பயந்து போயிருப்பார்கள்.

ஆயனர் சிவகாமியைப் பார்த்து, "குழந்தாய்! அடிகள் கூறுவது உண்மைதான். வண்டியில் ஏறிக் கொள்! குண்டோதரனிடம் எல்லாம் பிறகு விவரமாய்க் கேட்கலாம்" என்றார்.

சிவகாமியின் உள்ளத்தில் குண்டோதரனைக் கேட்பதற்கு எத்தனையோ கேள்விகள் தோன்றிக் கொண்டிருந்தன. ஆனால், எல்லாவற்றுக்கும் மேலாக அவள் ஒரு கேள்வி கேட்க விரும்பினாள். அதாவது, குண்டோதரனுக்குக் குதிரை எப்படிக் கிடைத்தது? — ஒருவேளை குமார சக்கரவர்த்தியின் கோபம் தணிந்து தங்களைப் போய்த் திருப்பி அழைத்து வருவதற்காக அவர்தான் குண்டோதரனுக்குக் குதிரை கொடுத்து அனுப்பியிருப்பாரோ என்று அவள் மனத்துக்குள்ளே ஒரு சபல நினைவு தோன்றியிருந்தது.

எனவே, "அப்பா! அத்தை வண்டியில் ஏறிக் கொள்ளட்டும்; நான் சற்று நேரம் உங்களுடன் நடந்து வருகிறேன்" என்றாள்.

### இருபத்தோராம் அத்தியாயம்

## குதிரை கிடைத்த விதம்

அத்தை வண்டியில் ஏறிக்கொண்டதும், வண்டி புறப்பட்டது. மற்றவர்கள் பின்னால் நடந்து சென்றார்கள். குண்டோதரனும் தன் குதிரையின் தலைக் கயிற்றைப் பிடித்து நடத்திக் கொண்டு வந்தான்.

"அப்பா! குண்டோதரனுக்குக் குதிரை எப்படிக் கிடைத்தது? அதைச் சொல்லும்படி கேளுங்கள்!" என்றாள் சிவகாமி.

"குண்டோதரனுக்குக் குதிரை ஏறத் தெரியும் என்றே எனக்குத் தெரியாது, அம்மா! குண்டோதரா! நீ எப்போது குதிரை ஏற்றம் கற்றுக்கொண்டாய்?" என்று கேட்டார் ஆயனர்.

"குருவே! உலகத்தைத் துறந்து காவித்துணி புனைந்த புத்த பிக்ஷுக்கள் கூட இந்த நாளில் குதிரை ஏறுகிறார்களே! இந்தக் குதிரைகூட ஓர் இளம் புத்த பிக்ஷு ஏறிக் கொண்டு வந்தது தான்; குருவே! அந்த இளம் பிக்ஷுவை ஏரியில் தள்ளிவிட்டு நான் குதிரை மேல் ஏறி வந்து விட்டேன்!" என்று குண்டோதரன் கூறிக் கலகலவென்று சிரித்தான்.

குண்டோதரன் சொல்லுவதெல்லாம் நாகநந்திக்குக் கோபம் மூட்டுவதாயிருப்பதைக் கண்ட ஆயனர்,



"குண்டோதரா! இது என்ன? என் சிஷ்யன் என்று பெயர் வைத்துக் கொண்டு இப்படியெல்லாம் செய்யலாமா? கொஞ்சமும் நன்றாயில்லையே?" என்றார்.

சிவகாமி, "அப்பா! குண்டோதரன் அப்படியெல்லாம் ஒன்றும் செய்திருக்க மாட்டான். வேடிக்கைக்காகச் சொல்கிறான்" என்றாள்.

"இல்லை, இல்லை! நிச்சயமாகத்தான் சொல்கிறேன். இங்கேயிருந்து இரண்டு காத தூரத்தில் சாலை ஓரமாக ஓர் ஏரி இருக்கிறதே, நீங்கள் பார்க்கவில்லையா? அந்த ஏரியிலேதான் அந்த இளம் பிக்ஷுவைத் தள்ளினேன்" என்றான் குண்டோதரன்.

நாகநந்தி பெரிதும் கலக்கமடைந்த குரலில் ஆயனருக்கு மட்டும் கேட்கும்படியாக, "சிற்பியாரே! என்ன நடந்தது என்று விவரமாய்க் கேளுங்கள்!" என்றார்.

ஆயனர் அவ்விதமே விவரமாய்ச் சொல்லும்படி கேட்டதன் மேல் குண்டோதரன் சொன்னான்: "உங்களை வீட்டில் காணாமல், 'அடடா! நம்முடைய குரு இப்படி நம்மைக் கைவிட்டு விட்டுப் போய்விட்டாரே!' என்று நான், கவலையுடன் மரத்தடி

யில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தேன். பல குதிரைகள் வரும் சத்தம் கேட்டு விழித்துக் கொண்டு மரத்தின் மறைவிலிருந்தபடியே பார்த்தேன். வந்தவர்கள் அனைவருமே அவசரமாய்த் திரும்பிப் போய் விட்டார்கள். 'அடடா! இவ்வளவு குதிரைகளில் நமக்கு ஒரு குதிரை கிடைத்தால் நம் குருவைப் போய்ப் பிடித்து விடலாமே? கால் நடையாகப் போய்ப் பிடிக்க முடியுமா?' என்று நான் கவலைப்பட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கையில், ஓர் இளம் புத்த பிக்ஷு சற்றுத் தூரத்திலிருந்த இன்னொரு மரத்தடியின் மறைவிலிருந்து வெளியே வந்தார். அந்த வீட்டுக்கு நாகநந்தி அடிகள் வந்திருந்தாரா என்று என்னைக் கேட்டார். அப்போது தாமரைக் குளக்கரையில் இந்த அடிகளைப் பார்த்த நினைவு



எனக்கு வந்தது. அவர் பெயர் என்னவோ எனக்குத் தெரியாது. 'ஒரு பிக்ஷுவைத் தாமரைக் குளக்கரையில் கண்டேன்' என்றேன். இளம் பிக்ஷு சற்று நேரம் யோசித்து விட்டுக் கிளம்பினார். வழித்துணை கிடைத்தது என்ற சந்தோஷத்துடன் நானும் அவருடன் கிளம்பினேன். ஆனால், அந்த இளம் பிக்ஷு என்னை ஏமாற்றி விட்டார். கொஞ்ச தூரம் போனதும், காட்டின் மறைவில் கட்டியிருந்த இந்தக் குதிரையின் மேல் ஏறிக் கொண்டு என்னிடம் சொல்லக் கூடச் செய்யாமல் வேகமாகப் போய் விட்டார். ஆகா! யாரை நம்பினாலும் நம்பலாம், புத்த பிக்ஷுக்களை மட்டும் நம்பக் கூடாது! இதோ நம்முடன் வரும் அடிகள் நீங்கலாகச் சொல்கிறேன்'' என்றான் குண்டோதரன்.

ஆயனர், ''குண்டோதரா! பெரியோர்களாகிய புத்த பிக்ஷுக்களைப் பற்றித் தூஷணை சொல்லாதே! பிறகு நீ என்ன செய்தாய் என்று சொல்லு!'' என்றார்.

''நானா? நான் என்ன செய்வது? குருவே! 'நமக்குக் குதிரை இல்லாமல் போனால் போகட்டும்; கடவுள் கொடுத்த இரண்டு கால்கள் இருக்கிறதல்லவா?' என்று எண்ணிக் கொண்டு கிளம்பினேன். இரண்டு நாட்கள் பிரயாணம் செய்ததில் கால் வலி கண்டு இன்று மத்தியானம் ஏரிக் கரையில் சாலை ஓரமாக உட்கார்ந்து கொண்டிருந்தேன். அப்போது பாருங்கள், அதே இளம் பிக்ஷு குதிரைமேல் வந்தார். 'அடிகளே! இதென்ன, எனக்கு முன்னால் கிளம்பினீர்கள். பின்னால் வருகிறீர்களே!' என்று கேட்டேன். என்னைப் பார்த்ததில் அவருக்கு அதிக ஆச்சரியமாய்ப் போய் விட்டது. 'ஆமாம், அப்பா! இந்தக் காலத்தில் கால்நடைப் பிரயாணத்தை விடக் குதிரைப் பிரயாணம் தான் அதிக ஆபத்தாயிருக்கிறது. பல்லவ இராஜாங்கம் தான் தரித்திரம் பிடித்த இராஜாங்கமாயிருக்கிறதே? எங்கேயாவது குதிரையைக் கண்டால் யுத்தத்துக்கு வேண்டுமென்று கைப்பற்றிக் கொள்கிறார்களாமே? அதற்காகப் பயந்து பயந்து வர வேண்டியதாயிருந்தது!' என்றார். அப்புறம் பிக்ஷு குதிரை மேலும் நான் கால் நடையாகவும் கொஞ்ச தூரம் வந்தோம். அப்போது பிக்ஷு அடிக்கடி, 'தாகமாயிருக்கிறது' 'தாகமாயிருக்கிறது' என்று சொல்லிக் கொண்டே வந்தார். அவர் மேல் எனக்கு மிகவும் பரிதாபம் உண்டாகி விட்டது. 'அடிகளே! இந்தத் திவ்யமான ஏரியில் தண்ணீர் குடித்துத் தாகம் தணித்துக் கொள்ளுங்களேன்!' என்று சொல்லி, அவரைக் குதிரை மேலிருந்து ஒரு தள்ளுத் தள்ளினேன். பிக்ஷு ஏரியில் விழுந்தார். அடடா! என்ன ஆனந்தமாக அவர் ஏரித் தண்ணீர் குடித்தார் தெரியுமா...?''

இதைக் கேட்ட சிவகாமியினால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. ஆயனர், ''அம்மா, இதென்ன அசந்தர்ப்பமான சிரிப்பு?'' என்று அதட்டி விட்டு, ''அட பாவி! அப்புறம் என்னடா செய்தாய்?'' என்று குண்டோதரனைப் பார்த்துக் கேட்டார்.

''குருவே! புத்த பிக்ஷுவுக்குத் தண்ணீர் கொடுத்து, தாகத்தைத் தணிப்பது பாவமா?'' என்றான் குண்டோதரன்.

''அப்புறம் என்ன செய்தாய், சொல்!'' என்று ஆயனர் மிகவும் கடுமையான குரலில் கேட்டார்.

# வாழ்க்கை உணர்ச்சி மயமானது

## 'க்ளிக்' அடித்துவைப்பீர்..நிரந்தரம்

எப்போதுமே உங்கள் கையோடிருக்கட்டும் தப்பாத் துணையான க்ளிக் III, மறைந்தோடும் வாழ்வின் மணியான கணங்களை நிரந்தரமாக்கிக் காப்பீர்—நினைவுமுகம் கண்முன் நிற்பதற்கே.

'இலக்கு வைத்ததும் சடக்' என எடுக்கவே ஆக்பா க்ளிக். காரியத் தகுதி வாய்ந்தது. உண்மை தவறாதது. கையாள எளிது. சிக்கனமிக்கது.

- 120 பிலிம் ரோல் ஒவ்வொன்றுக்கும் பெரிது பெரிதாக (6 x 6 செமீ.) படங்களைப் பெறுவீர்கள்.
- சிறப்பானதோர் தயார்த் தோலுறை, போர்ட்ரெய்ட் லென்ஸ், ஃப்ளாஷ்கன் ஆகியவை மேற்கொண்டு தனிவிலைக்குக் கிடைக்கும்.

விலை ரூ. 56.25 (எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது. இதர வரிகள் தனி).

Simoes/AG/18C Tam



தெள்ளத் தெளிவான பிரிண்டுகளுக்கும், என்லார்ஜ்மெண்டுகளுக்கும் கண்டிப்புடன் கோருவீர் ஆக்பா-கேவார்ட் போட்டோத் தாள்களை.

அனுமதிபெற்ற எல்லா ஆக்பா-கேவார்ட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.

ஆக்பா-கேவார்ட் AG லீவர்குஸன் அவர்களின் கூட்டுறவோடு இவற்றைத் தயாரிப்போர்: தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்.




ஏகபோக விநியோகஸ்தர்கள்:
**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**
பம்பாய் • நியூ டெல்லி • கல்கத்தா • சென்னை

இ புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ஆக்பா-கேவார்ட், ஆன்ட்வெர்ப்/லீவர்குஸன் ஆகியோரின் ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்.




ஆக்பா க்ளிக்— இந்தியாவின் உன்னதப் புகழ்பெற்ற காமிரா.



எண்ணெய் நெருக்கடி பயங்கரமாக அச்சுறுத்துகிற தருணத்தில் பூமியிலிருந்து குரூட் ஆயில் எடுப்பதில் புதிய முறைகள் பரிசோதித்துப் பார்க்கப்படுகின்றன. ஷேல் பாறைகளிலிருந்து எண்ணெய் தயாரிக்கலாம். ஷேல் பாறை என்பது ஸ்லேட் போல ஆனால் களிமண் மாதிரி சற்று மிருதுவாக இருக்கும். இவற்றை வெட்டி எடுப்பது கடினம். தற்போது படத்தில் காணப்படும் டாஸ்கோ-2 என்ற இயந்திரம் அமெரிக்காவில் பரிசோதித்துப் பார்க்கப்பட்டு வருகிறது. ஒரு நாளைக்கு அறுபத்தாராயிரம் டன் ஷேல் பாறைகளை வெட்டி எடுக்கும். அதிலிருந்து ஐம்பதாயிரம் பீப்பாய் குரூட் எண்ணெய் தயாரிக்கலாம். ஷேல் பாறைகள் தமிழ் நாட்டிலும் காணப்படுவது குறிப்பிடத் தக்கது.

ஸ்ரீமதி வைஜயந்திமாலா பாலியின் மராட்டிய நாட்டிய நாடகமான சாந்த சக்கு மகாராஷ்டிரத்தில் சக்கைப் போடு போட்டுக் கலை வண்ணம் சேர்த்திருக்கிறது. ஒருபுறம் மகாராஷ்டிரத்தின் புகழுக்குப் புகழ் சேர்க்கும் அபங்கங்கள் உதவின என்றால், இன்னொருபுறம் வசந்த தேசாயின் இசையும், வாணி ஜெயராமின் பாடல்களும் பெருமை சேர்த்தன. தமது நாட்டியாலய மாணவிகளின் அருமையான ஒத்துழைப்புடன் ஸ்ரீமதி வைஜயந்திமாலா சாந்த சக்குவாக நாட்டிய விருந்து அளித்தார்.



''என்ன செய்தேனா? பிக்ஷுவுக்கு நீந்தத் தெரியாதென்று தெரிந்ததும் கரையில் கிடந்த அவருடைய மேல் வஸ்திரத்தை எடுத்து, அதன் ஒரு முனையைக் கரையிலிருந்த மரத்தின் வேரில் கட்டினேன். இன்னொரு முனையை அவர் பிடித்துக் கொண்டதும், 'பிக்ஷுவே! மெதுவாகக் கரையேறி வந்து சேருங்கள்! . நான் போகிறேன்!' என்றேன். அப்போது அவர், 'ஐயோ! ஓலை! ஓலை!' என்று அலறினார். 'என்ன ஓலை?' என்று கேட்டேன். 'நாகநந்திக்குக் கொண்டு வந்த ஓலை! கரையிலே கிடக்கிறதா, பார்!' என்றார். கரையிலே பார்த்தேன். ஓர் ஓலை கிடந்தது. அதை எடுத்து அவருக்குக் காட்டி, 'ஓலை பத்திரமாயிருக்கிறது, கவலை வேண்டாம்' என்று சொல்லி விட்டுக் குதிரை மேல் ஏறிக் கொண்டேன். அவ்வளவுதான்; இங்கே வந்து சேர்ந்தேன்'' என்று குண்டோதரன் தன் கதையை முடித்தான்.

குரோதம் நிறைந்த குரலில் நாகநந்தி, ''ஆயனரே! தயவுசெய்து உமது சீடனிடமிருந்து ஓலையை வாங்கிக் கொடுங்கள்!'' என்றார்.

ஆயனரும் கலக்கத்துடன், ''குண்டோதரா! என் பெயரைக் கெடுக்கவா நீ என் சீடனானாய்? நல்ல காரியம் செய்தாய்! போகட்டும், இவர்தான் நாகநந்தியடிகள். அந்த ஓலையைக் கொண்டு வந்திருக்கிறாயா? இப்படிக் கொடு!'' என்றார். ''குருவே! அப்படியா? நான் நினைத்தது நிஜமாய்ப் போயிற்றே? இவர்தானா நாகநந்தியடிகள்! சுவாமி! இதோ ஓலை!'' என்று குண்டோதரன் நாகநந்தியடிகளிடம் ஓலையைக் கொடுத்தான். அதை அவர் மௌனமாக வாங்கிக் கொண்டு சாலை மரங்களின் வழியாக வந்து கொண்டிருந்த நிலாக் கிரணங்களின் உதவியினால் படிக்க முயன்றார். ஆனால், படிக்க முடியவில்லை என்று தெரிந்தது.

பிக்ஷுவின் நடை முன்னைக் காட்டிலும் வேகத்தை யடைந்தது. அந்தச் சாலையில் வண்டிச் சத்தத்தையும் குதிரையடிச் சத்தத்தையும் மனிதர் காலடிச் சத்தத்தையும் தவிர மற்றப்படி நிச்சப்தம் குடி கொண்டது. மனிதரின் பேச்சுச் சத்தம் அடியோடு நின்றது.

(தொடரும்)

# Links the several worlds of women

Every fortnight, Femina reaches out to over two million readers across Asia. It brings to them a discerning, balanced and urbane interpretation of the Indian woman today—and through her, of the country she has helped to change.

Policy-maker, home-keeper or ego-preserver, the Indian woman is, like her counterparts in Asia, destroying old myths and carefully defined roles. She is emerging as the force that motivates much of the change in the sub-continent.

Femina records her life, her changing values, her experiences...every fortnight in colour and black and white.

*femina*

**A FORTNIGHTLY FOR EVERY WOMAN**

A TIMES OF INDIA PUBLICATION

# பெரிதும் உழைக்கும்..

ஈசாபின் நீதிக் கதை தெரியுமல்லவா? ''வேலே செய்வது நாங்கள், கொட்டிக்கொள்வது வயிறு?'' என்ற ஆத்திரத்தில் உடலின் உறுப்புக்கள் பலவும் வேலைநிறுத்தம் செய்த கதை. ''வயிறு நன்ருக வாடட்டும்'' என்று சபித்தன அவை. வயிறு மட்டுமா வாடியது? வயிற்றுக்கு உணவு செல்லாதபோது உடல் உறுப்புக்கள் எல்லாமே வாடின! வயிற்றுக்குச் செல்லும் உணவுதான் தங்களுக்கு உதவும் சக்தியாக மாறுகிறது என்னும் உண்மையை வாடி வருந்தி அறிந்து கொண்டன அந்த உறுப்புக்கள்.

உணவில் உள்ள சத்துப் பொருள்களை மட்டும் தனியே பிரித்து உறிஞ்சிக்கொண்டு சக்கையை மேலே செல்ல அனுமதிக்கும் முக்கியமான உறுப்பு சிறுகுடல். 'எண்சாண் உடலை ஒரு சாணுய்க் குறுக்கிக் கொண்டு...' என்னும் சொற்ருெடர் சிறுகுடலுக்குக் கச்சிதமாகப் பொருந்தும். உயிரோட்டம் உள்ள வரையில் ஒரு சாண் எல்லைக்குள் மடங்கி மடங்கி எட்டடி நீளமுள்ளதாய் விளங்கும் இது, பின்னர் தொய்ந்து, இருபது அடி நீளத்துக்குத் தளர்ந்து விடும்!

உடலை வாழ வைக்கும் சிறு குடலைப் பாதுகாக்கும் வகையிலும், அதற்குத் துணை செய்யும் முறையிலும் வயிற்று அறையில் வேறு பல உறுப்புக்கள் சூழ்ந்துள்ளன. உண்ணும் உணவை அரைத்துக் கூழாக்கி இங்கே அனுப்புகிறது இரைப்பை. அந்தக் கூழ் இங்கே சேருமுன் உணவின் அமிலக் காரத்தை மிதப்படுத்தி வைக்கிறது, குடல் வாயான டையோடினை வளைவு. கல்லீரலும் கணையமும் ஜீரணச் சாறுகளைத் தேவைக்கு ஏற்ப வழங்குகின்றன. ஜீரணமாகி உறிஞ்சப்பட்ட சக்திச் சாற்றைக் கொள்முதல் செய்து வகைப் படுத்தி, உடலுக்கேற்ற சக்திப் பொருளாக்குகிறது அருகே உள்ள கல்லீரல். உணவின் சாரம் உறிஞ்சப்பட்டதும் எஞ்சிய சக்கையை வெளியேற்ற வழி செய்கின்றன பெருங்குடல் பகுதிகள்.

சிறு குடலின் முதல் பகுதியில் (ஜிஜூனம்) உணவு வேகமாகப் பயணமாகிறது. பின் பாதியில் (இலியம்) மெதுவாகப் பயணமாகிறது. இரைப்பையைப் போலவே மூன்று வகை வலுவான தசை உறைகளால் ஆன குழலே இந்தக் குடல். சுமார் ஒன்றரை அங்குல விட்டமுள்ள இந்தக் குழாயின் உள் சுவர் முழுதும் வெல்வெட்டுத் துணியின் நுண் இழைகள் போன்ற சன்னமான கதிர்கள் ஏராளமாக இருக்கும். இவையே 'வில்லய்' என்னும் குடல் உறிஞ்சிகள்; ஜீரணம் என்னும் அற்புத இரசாயன மாற்றத்தைச் செய்பவை.

''சாப்பிடும் சாப்பாடு உடம்பிலே ஒட்டவில்லையா?'' என்று கேட்பதுண்டு. உடலிலே ஒட்டுவது என்ருல் என்ன? கையால் பிசையப்பட்டு, பல்லில் அரைபட்டு, இரைப்பையில் கலக்கப்பட்டு, குடல்வாயிலில் பக்குவப்பட்டு வரும் உணவு சிறு குடலின் உறிஞ்சிகள் மூலம் தான் உடலில் ''ஒட்டு''கிறது! அதிலும் முக்கியமாக, கீழ்ச் சிறுகுடலில்தான் இந்தப் பரிமாற்றம் பூரணமாகிறது எனலாம். இதற்காக, உணவு இங்கே சுமார் மூன்று மணி நேரம் தங்குகிறது. சிறுகுடல் விம்மிச் சிறுத்து, விம்மிச் சிறுத்து, உணவைக் கலக்கிக் கரைத்து, மெல்ல, மெல்லக் கவளம் கவளமாக அடுத்து அடுத்து அலைஅலையாக நகர்த்துகிறது. இது ஓர் அற்புத லயமிக்க நடன இயக்கம்!

வயலுக்குப் பாயும் நீரின் சத்தைப் பயிர் உறிஞ்சிக் கொள்வதுபோல, வில்லய் என்னும் குடல் உறிஞ்சிகள் உணவின் சத்தை உறிஞ்சுகின்றன. குடல் சுவரிலே விரல்களைப் போல நீட்டிக் கொண்டிருக்கும் இவை ஒவ்வொன்றும் தன்னுள்ளே மெல்லிய ரத்தக் குழாய்களைக் கொண்டிருக்கும். அவற்றின் வழியாக, ஜீரணமான சாறு கல்லீரலுக்குப் பயணமாகும். கொழுப்புச் சாற்றினை மட்டும் வில்லய்யிலுள்ள லிம்பாய்ட் குழாய்கள் சேகரித்துப் பின்னர் ரத்தத்தில் சேர்க்கின்றன.

ஒரு வைத்திய நிபுணர் கூறியது போல் நமது தென்னிந்திய மக்கள் சாப்பிடுவதே குறைவு, அவர்களில் பலருக்குச் சிறு குடலின் ஜீரண சக்தியும் குறைவு! ஆகவே குடல் பற்றிய பல நோய்கள் பாரதத்தின் தென் பகுதிகளிலே நிறையக் காணப்படுகின்றன. அதற்கான ஆராய்ச்சிகளும் தமிழ்நாட்டிலே தான் அதிகம் நடைபெறுகின்றன.

வயிற்று வலி என்று சொல்லும்போது, பெரும்பாலும் அது சிறுகுடல் தொல்லையாகவே இருக்கக் காணலாம். உணவு உடலில் ஒட்டாத 'கிரகணி' கோளாறு பற்றிப் பண்டைய ஆயுர்வேத நூல்களிலேயே தெளிவான விவரங்கள் இருக்கின்றன. நோய் விவரங்களும் சிகிச்சை முறைகளும் உள்ளன.

இன்று புதிய புதிய முயற்சிகள் குடல் ஆராய்ச்சியில் மேற்கொள்ளப்பட்டுள்ளன. பல பெரிய மருத்துவ மனைகளில் இரைப்பை




வில்லய்: சிறு குடலில் இடம் பெற்றிருக்கும் மயிரிழை போன்ற உறுப்புக்கள். இவை உணவின் சத்தைக் கிரகித்து ரத்தத்தில் சேர்ப்பிக்கின்றன.

# ....சிறுகுடல்

குடல் பிரிவு (Gastroenterology) தனியே இயங்குகிறது. குடல் மருத்துவ நிபுணர்கள் தங்களுக்கெனத் தனி ஆராய்ச்சிக் கழகம் அமைத்துத் தமது அனுபவங்களைப் பகிர்ந்து கொள்கின்றனர். (இவர்களது அனைத்திந்திய மாநாடு அண்மையில் உதகமண்டலத்தில் நடைபெற்றது.) இன்று எக்ஸ்ரே, ரேடியோ மாத்திரை போன்ற நவீன சாதனங்கள் உள்ளன. ஒரு சொட்டு ரத்தத்தை எடுத்துப் பரிசோதிப்பது போல, குடலிலிருந்து நுணுக்கமாகச் சிறு பகுதியை வாய் வழியாகவே பிய்த்தெடுத்து ஆராயும் வசதிகளும் உள்ளன. இவற்றால் எல்லாம் பல நோய்களின் அடையாளங்களும், காரணங்களும் தெளிவு பெறுகின்றன. சிகிச்சையளிக்க முடிகிறது. நோய்த் தடுப்புக்கு உதவ முடிகிறது. வேலூர் கிறிஸ்துவ மருத்துவ மனை கிரகிணி நோய் ஆராய்ச்சியில் தலையாய பங்கு வகிக்கிறது என்கிறார்கள்.

சிறு குடலில் கொக்கிப் புழு, நாக்குப் பூச்சி, நாடாப் பூச்சி போன்றவை சேரலாம். சத்துள்ள உணவானாலும் உடலுக்குப் பயனில்லாது போகும். இது தவிர காசம் வரலாம், கிரகணி பற்றலாம். டைபாய்ட் சுரமும் காலரா நோயும்கூட குடல் பற்றியவையே. இவை பலவற்றுக்குக் காரணம் நுண்கிருமிகளே. வயிற்றுக் கோளாறு எதுவானாலும் தகுந்த வைத்திய உதவியை நாட வேண்டும்.

வயிற்றுக் கோளாறுகளுக்கு அடையாளங்கள் வயிற்றுப் போக்கும் வாந்தியும் ஆகும். சில கோளாறுகளுக்கு வயிறு விட்டு விட்டு வலிக்கும். பொருளாதார வசதி இன்மையால், சத்து மிக்க உணவாக உண்ண முடியாதிருக்கும்போது, இருக்கும் கொஞ்சத்தையும் குடல் உறிஞ்சாது நோய்ப்பட்டு விட்டால் ரத்த சோகை, வாய்ப் புண், தளர்ச்சி, தோல் சுருக்கம் வயிற்றிலே இரைச்சல், வயிறு உப்புசம் என்றெல்லாம் அடையாளங்கள் காட்டும். உண்ணும் உணவில் புரதச் சத்து, சுண்ணம்புச்சத்து போன்றவை போதிய அளவு இராவிட்டாலும் சில தொல்லைகள் தெரியும். கால் வீக்கம், எலும்பிலே குடைச்சல் போன்றவை இத்தகைய குறைபாடுகளின் அடையாளங்களே.

குடல் அடைத்துக் கொள்வது என்பது ஒரு சிக்கல். எத்தனையோ பல காரணங்களால் இரைப் பையிலிருந்து பெருங் குடல் வரை பல நிலைகளில், பல அளவுகளில் இந்த அடைப்பு நேரலாம். வைத்திய நிபுணர்கள் அறிந்து சிகிச்சை செய்ய வேண்டிய தொந்தரவு இது.

பொதுவாகக் குடல் நோய்களுக்கு முக்கிய காரணம் மல அம்சங்கள் நீரிலும் உணவிலும் எப்படியோ கலந்து விடுவதுதான். தனிப்பட்ட முறையிலும் சமூகமாகவும் சுத்தமாக வாழும் பழக்கம் பரவாதவரை நோய்கள் தான் பரவும். ஊருக்குப் பொதுவான நீர் நிலைகளில் அசுத்தமும் செய்து, குடிநீரும் எடுத்தால் எப்படி?

உணவு உட்கொள்வதற்கு முன்பு கைகளைச் சுத்தமாகக் கழுவிக் கொள்வது ஒரு நல்ல பழக்கம். சமைப்போரின் சுத்தமும் பரிமாறுவோரின் சுத்தமும் மிக முக்கியம். ஹோட்டல், ஹாஸ்டல் போன்ற இடங்களில் பலநூறு பேருக்குச் சமைப்பவர், பரிமாறுவோர் சுத்தமான பழக்கம் இல்லாதவராக இருந்தால் உணவு வழியே நோய்க் கிருமிகள் பரவ வாய்ப்புக்கள் பெருகுகின்றன. இத்தகைய ஊழியர்கள் சுத்தமாக இருக்க என்ன வசதிகள் தேவையோ, அவற்றை அந்தந்த நிலையங்களின் நிர்வாகிகள் செய்து தரவேண்டும்.

கட்டுரை: **தம்பி சீனிவாசன்**

ஆலோசனை: **டாக்டர் தமது பெயரை வெளியிட விரும்பவில்லை.**



பல நூறு பேருக்குச் சமைப்பவர் பரிமாறுகிறவர், சுத்தமான பழக்கம் இல்லாத வராக இருந்தால் உணவு வழியே நோய்க் கிருமிகள் பரவ வாய்ப்புக்கள் பெருகு கின்றன.

# பொன் விழாவுக்குப் பூர்வாங்க விழா!

காந்திமகானை நினைக்கும்தோறும் நினைவுக்கு வருவது, சபர்மதி ஆசிரமமும் வார்தா ஆசிரமமும். தமிழக காந்திஜியான ராஜாஜியை நினைத்தால் நினைவுக்கு வருவது திருச்செங்கோடு காந்தி ஆசிரமமேயன்றோ!

சுமார் எழுபதாண்டுகளுக்குமுன் செல்வம் கொழிக்கும் மிட்டாதார் குடும்பத்தைச் சேர்ந்த இரண்டு சகோதரர்கள் சென்னை கடற்கரை ஓரமாக நடந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

மூத்தவர் சொன்னார்: ''இந்தச் சமுத்திரம் மட்டும் மதுக் கடலாக இருந்தால், ஆகா! எவ்வளவு அள்ளி அள்ளிப் பருகலாம்'' என்று. இளையவர், ''என்ன அண்ணா! நீங்கள் இவ்வளவு கருமியாக இருக்கிறீர்களே. கையால் அள்ளி அள்ளிப் பருகலாம் என்கிறீர்கள். நாம் மீன்களாக மாறிவிட்டால், அந்த மதுக் கடலில் மூழ்கி நீந்திக்கொண்டேயிருக்கலாமே!'' என்றாராம்.

இப்படிப் பெரும் குடியர்களாக இருந்தவர்தான், குடிப் பழக்கத்தை அறவே ஒழித்துவிட்டு மதுவிலக்குப் பிரசாரத்தில் முன்னணியில் நின்றாராம். இப்படியொரு மாற்றத்தை அவரிடம் ஐம்பதாண்டுகளுக்குமுன் செய்த அந்த ரஸவாதி யார் — ராஜாஜிதான்! குடிப் பழக்கத்தைத் தாம் விட்டது மட்டுமின்றி, ராஜாஜி கதர், தீண்டாமை ஒழிப்பு, மதுவிலக்கு ஆகிய திட்டங்களை நிறைவேற்ற கிராம மக்களிடையே ஆசிரமம் அமைக்க நினைத்தபோது நிலத்தை வழங்கி எல்லா உதவிகளும் கொடுத்தவர்தான் ரத்னசபாபதிக் கவுண்டர். அவர் வழி வந்த பேத்திதான் ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம். அவர்தாம் சென்ற மார்ச் முதல் தேதி திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தின் பொன்விழாவின் போது தமது பாட்டனார்களின் மேற்கண்ட கதையைக் கூறி, ராஜாஜியின் சேவையையும் நினைவுகூர்ந்து, அங்கு குழுமியிருந்த ஆயிரக்கணக்கான கிராம மக்களைக் குடிப் பழக்கத்தை விட்டு ஒழிக்கும்படி பெண் குலத்தின் சார்பில் இறைஞ்சிக் கேட்டுக் கொண்டார்.

நாற்பத்தொன்பது ஆண்டுகளுக்குமுன் ராஜாஜி திருச்செங்கோட்டிலிருந்து ஏழு மைல் தூரத்திலுள்ள புதுப் பாளையம் என்ற கிராமத்தில் காந்தி ஆசிரமத்தை நிறுவினார். திருச்செங்கோடோ, சங்ககிரி ரயிலடியிலிருந்து ஏழு மைல் தூரத்தில் இருந்தது. ஆக, காந்தி ஆசிரமம் ரயிலடியிலிருந்து பதினாலு மைல் தூரத்தில் இருந்தது. மாட்டு வண்டி தவிர எவ்வித போக்குவரத்து வசதியும் கிடையாது. இந்தக் குக்கிராமத்திலிருந்து கொண்டு, காந்திஜியின் நிர்மாணத் திட்டமான, கதர்ப் பணி, மதுவிலக்குப் பிரசாரம், தீண்டாமை ஒழிப்பு முதலிய பணிகளில் ஈடுபட்டிருந்தார். அதே சமயம் நாட்டு விடுதலை இயக்கப் பணியிலும் கருத்துக் கொண்டு வட நாட்டில் காந்தி மகான், வல்லபாய் பட்டேல், ராஜன்பாபு, ஜவாஹர்லால் நேரு போன்றவர்களுடன் இணைந்து இயங்கி வந்தார். இங்கிருந்து கொண்டு காந்திஜி நடத்தி வந்த ''யங் இந்தியா'' என்ற ஆங்கிலப் பத்திரிகையின் ஆசிரியப் பொறுப்பும் ஏற்று நடத்தி வந்தார். இத்தனை பணிகளையும் எந்தவிதமான வசதிகளும் இல்லாத நாட்களில் எப்படித்தான் ராஜாஜி செய்தாரோ என்று அங்கு தற்போது குழுமியிருந்த விருந்தினர்கள் வியந்தனர்!

ஆசிரமத்தின் பொன்விழா ஆண்டுத் தொடக்க விழா நமது மேன்மை தங்கிய ஆளுநர் திரு கே. கே. ஷா அவர்கள் முன்னிலையில் நடைபெற்றது. ராஜாஜியின் வெண்கலச் சிலையை ஆசிரமத்தில் மார்ச்சு முதல் தேதியன்று திறந்து வைத்தார் ஆளுநர். இவ்விழாவுக்கு பம்பாய் காதி கிராமக் கைத்தொழில் கமிஷன் தலைவர் திரு ஜி. ராமசந்திரன் தலைமை வகித்தார். முன்னாள் முதல்வர் திரு பக்தவத்ஸலம், அமைச்சர் திரு க. ராஜாராம், திரு கக்கன், தமிழக மேல் சபைத் துணை சபாநாயகர் திரு ம.பொ.சி. திரு சா. கணேசன், திரு ஆர். டி. பார்த்தசாரதி இப்படிப் பலர் தங்களுடைய அனுபவங்களை நினைவுகூர்ந்து ராஜாஜிக்கு அஞ்சலி செலுத்தினர். கவர்னர் ஷா அவர்கள் தமது உரையில், ராஜாஜி அவர்கள் தேச நலனைக் கருதி நன்கு யோசித்து ஒரு முடிவு எடுத்தாரானால், பிறகு அதனை எதிர்த்து உலகமே திரண்டு எழுந்தாலும் உறுதியுடன் இருப்பார் என அவர் திடசித்தத்தைப் பாராட்டினார். எந்த முகஸ்துதியும், பாராட்டுரையும், அவரைப் பாதித்ததில்லை. தயவும் தாட்சிண்யமும் தகாத இடத்தில் அவர் காட்டியதில்லை. தம் நிலையை விட்டுப் பிறழாமல் நின்ற அவரது அரிய திடசித்தத்தைப் பெரிதும் புகழ்ந்த ஆளுநர் அத்தகைய மகானை இனியும் காண்போமா என்ற ஏக்கத்தையே சபையோர் உள்ளத்தில் உண்டாக்கிவிட்டார்.

ராஜாஜி மண்டபத்தை திரு ஷா திறந்து வைக்கிறார்.



இந்த இனிய வைபவத்தையொட்டி, ஒரு மலர் வெளியிடப்பட்டது. அம்மலரில் ராஜாஜி அந்த ஆசிரமத்திலிருந்துகொண்டு செய்த அரும் பணிகளை அந்நாளில் அவருடன் பணியாற்றிய பலரும் நினைவுகூர்ந்து எழுதியுள்ள அருமையான பல கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

அந்நாளில் படிப்பும், சமுதாயச் செல்வாக்கும் பெரும் பதவிகளை அளிக்கவிருந்த போதிலும் அவற்றைத் துறந்து, ஏழை எளியவர்களைப் போல் வாழ்ந்து, ராஜாஜி காட்டிய வழியில் ஆசிரமத்தில் பணி புரிய வந்த இளைஞர்கள் பலர். தேசபக்திக் கனல் நெஞ்சில் கனன்று கொண்டிருக்க இவ்வாறு இயங்கியவர்களில் சிலர் நாடறிந்த பெரியவர்கள். திரு க. சந்தானம் அவர்கள் இந்த ஆசிரமத்தில் ஐந்து ஆண்டுகள் மானேஜராக ராஜாஜியுடன் பணியாற்றியிருக்கிறார். அதே போல் பேராசிரியர் கல்கியும் இந்த ஆசிரமத்திலிருந்துதான் தமிழகத்துக்கு அறிமுகப் படுத்தப்பட்டார். இன்னும் சில அரிய தொண்டர்கள் இன்று நம்மிடையே இல்லை. ஆசிரமத்தில் அந்த நாட்களில் சேர்ந்து உறுதியுடன் பணியாற்றி வந்த பல தொண்டர்களுக்குக் கதராடைப் பரிசில்களும் ஒரு சிறு தொகை ரொக்கமாகவும் அளித்து, இன்றைய ஆசிரம நிர்வாகக் கமிட்டியின் தலைவரான வி. ஆர். நரசிம்மன் கௌரவித்தது எல்லோருக்கும் மகிழ்ச்சியளித்தது.

பகவத்கீதைக்கு ராஜாஜி எழுதிய விளக்க நூல்களான பிரசித்திபெற்ற, ''கண்ணன் காட்டிய வழி'' ''கைவிளக்கு'' என்ற புத்தகங்களையும், நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழிக்கு ராஜாஜி எழுதிய விசேஷ விளக்கம் கொண்ட ''பக்தி நெறி'' என்ற நூலையும் வானதி பதிப்பகம் திரு திருநாவுக்கரசு, புதிய பதிப்புக்களாக இந்த விழாவின்போது வெளியிட்டார்.

ராஜாஜியின் வெண்கல உருவச் சிலையைக் காந்தி ஆசிரமத்துக்கு அன்பளிப்பாகக் கொடுத்தவர்கள் திரு ஆர். ஜகந்நாதனும் ஆர். வேங்கடேசனும் ஆவார்கள். ஆசிரமத்தில் ராஜாஜி பத்து ஆண்டு காலம் தங்கிப் பணியாற்றிய குடிலுக்கு நேர் எதிரில் புதிதாகக் கட்டப்பட்ட சதுர மண்டபத்தில் ராஜாஜியின் சிலை திறந்து வைக்கப்பட்டது. இவ்வைபவத்துக்கு நாதசுர வித்துவான் நாமகிரிப்பேட்டை கிருஷ்ணனும், தவுல் வித்துவான் தஞ்சாவூர்கோட்டை முனிரத்னமும் மிக ஆர்வத்துடன் மங்கள இசை பரப்பி ராஜாஜிக்கு அஞ்சலி செலுத்தி மகிழ்ந்தனர்.

காந்தி ஆசிரமத்தில் அன்று தொட்டு இன்று வரை நடந்துவரும் முக்கிய பணி கதர் பணி. 1972—73ம் ஆண்டு பதினைறு லட்ச ரூபாய்க்குக் கதர் விற்பனையாகியுள்ளது என்றால் எவ்வளவு பெரிய கதர் உற்பத்தி ஸ்தலம் இந்த ஆசிரமம் என்பதை ஊகித்துக் கொள்ளலாம். பிப்ரவரி 28ந் தேதி கதர்ப் பணியில் ஈடுபட்டுள்ளவர்களின் ஆராய்ச்சிக் கருத்தரங்கு ஒன்றும் திரு ஜி. ராமசந்திரன் தலைமையில் நடைபெற்றது.

ஆதிநாட்களில் மர சக்கர சர்க்கா இருந்தது. அதிலிருந்து இன்றைய சர்க்கா எவ்வளவோ மாறுபட்டு வந்துவிட்டது. அம்பர் சர்க்கா என்றும், பதினறு கதிர்கள் கொண்ட சர்க்கா என்றும் சர்க்காவில் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளன. பழைய முறை சர்க்கா என்றால், நாளைக்கு நாலணாதான் சம்பாதிக்க முடியும். புது முறை சர்க்காக்களின் பயனாக நாளைக்கு மூன்று ரூபாய் வரை சம்பாதிக்க முடியும். ஆனால் பழைய காந்தியவாதிகள் புது சர்க்காக்களில் நூற்ற நூலில் நெய்யப்பட்ட ஆடையைக் கதராடை என்றே ஏற்றுக் கொள்வதில்லை. நாட்டின் பொருளாதார நிலை — விலைவாசியேற்றம் முதலியவை, புது முறை சர்க்காக்களை உபயோகத்துக்குக் கொண்டு வர வற்புறுத்துகின்றன. ஆதி நாளில் மில் துணியோடு கதராடை போட்டி போட முடியாமல் தவித்தது. மில் துணியைவிடக் கதர் ஆடை விலை அதிகமாக இருக்கும். இன்று நிலைமை முற்றிலும் மாறுபட்டுவிட்டது. இன்று கதர்த் துணி மில் துணியைவிட விலை மலிவு. மில்லில் நூற்ற நூலைவிட நேர்த்தியான நூல் சர்க்காவில் நூற்க முடியும் என்பது நிரூபிக்கப்பட்டுவிட்டது. மில் ரவிக்கைத் துணிகளான டெ டை டு என்று பெண்கள் பெரிதும் விரும்பும் மெல்லிய துணி வகைகளைவிடக் கதரில், சன்னமாகத் தயாரித்து மலிவான விலையில் விற்கமுடியும் என்ற நிலை ஏற்பட்டுவிட்டது.

இந்த இரண்டு நாள் வைபவமும் மிகச் சிறப்பாக இருந்தது என்று சொன்னால்—அதுவும் ரயிலடியிலிருந்து பதினறு மைல் தூரத்தில், தண்ணீர் இல்லாத பகுதியில் ஒரு குறையும் வைக்காமல் சிறப்பாக நடந்தது என்றால் அதற்குக் காரணம் ஆசிரமத்தின் இன்றைய செயலாளர் திரு சௌரி, திரு சுப்புரத்தினம், திரு சுவாமிநாதன், திரு எஸ். ஆர். சுப்பிரமணியம், திரு வி. ஆர். ராதாகிருஷ்ணன், ஸர்வோதயத் தொண்டர்கள், சேவகிகள் — ஆகியோரது உழைப்பு.

தன்னலம் கருதா தேசபக்தர்கள், நாட்டுக்கு உழைத்தவர்கள், பிரதிபலன் எதிர்பாராது சிறை சென்றவர்கள் ஆகியோர் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் குழுமியிருந்தனர். அந்தத்திருக்கூட்டத்தைப் பார்க்கக்கொடுத்து வைத்ததே பாக்கியம்தான். **எஸ். வி. எஸ்.**

அமைச்சர் ராசாராம், ஆளுநர், ஜி. ராமசந்திரன் ஆகியோர்





# திருமணம்

இளைஞர் வாழ்வில் இன்ப வசந்தம் திருமணம்— மங்கல மனை மாட்சிக்கும், நன் மக்கட் பேற்றுக்கும் வழி வகுப்பது. அதனால்தான் திருமணத்தை "ஆயிரங்காலத்துப் பயிர்" என அழைக்கின்றனர். இந்தக் காலத்தில் திருமணத்திற்கு ஏராளமான பணம் செலவாகிறது. உங்கள் செல்வ மகள் வளர்ந்து பெரியவளாகும்போது, அவள் திருமணத்திற்குத் தேவையான தொகை ஆகாயத்திலிருந்து 'பண மழை'யாகப் பொழியாது. நன்கு திட்டமிட்ட, நீண்ட காலச் சேமிப்பு மூலமே நீங்கள் அதற்கு வகை செய்ய இயலும். **எல்.ஐ.சியின் திருமண எண்டோமெண்ட் பாலிசித் திட்டம்** அதற்கு உகந்த சிறந்த திட்டமாகும்.



**ஆயுள் இன்சூரன்சு போல**
**ஆதரவு தருவது எதுவுமே இல்லை**

EP LIC-6-73

# விண்ணும் மண்ணும்

## கி.ராஜேந்திரன்

## 21. தப்ப வழி உண்டா?



உலகின் மிகவும் சுறுசுறுப்பான விமான நிலையங்களுள் ஒன்றான நியூயார்க், கென்னடி சர்வதேச விமான தளத்தில் சராசரியில் ஐந்தரை நிமிஷங்களுக்கு ஒரு விமானம் என்ற விகிதத்தில் வானவூர்திகள் புறப்பட்டுக் கொண்டிருக்கையில், ஒவ்வொரு விமானத்திலும் நூற்றுக் கணக்கான பயணிகள் வந்திறங்கவோ, கிளம்பவோ செய்கையில், கஸ்டம்ஸ் பரிசோதனை, விமான தளப் பாதுகாப்புச் சோதனை என்பனவெல்லாம் எவ்வளவு கடினமான காரியங்கள் என்பதை யாரும் எளிதில் ஊகிக்கலாம். இந்தத் துறைகளில் அசிரத்தையும் கூடாது. தீர ஆராய்கிறேன் என்று சொல்லிக் கொண்டு விமானங்களைத் தாமதிக்கச் செய்துவிடவும் கூடாது.

ஒரே ஒரு விமானம் புறப்படக் காலம் தாழ்த்தினால் அதன் பொருட்டுச் சங்கிலித் தொடராக எத்தனையோ பல பயணத் திட்டங்கள் பாதிக்கப்படும்; சர்வதேச முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சிகளுக்கு இடையூறு விளையும்; உலகப் பிரசித்தி பெற்ற தலைவர்கள் அதிருப்தி கொள்ள இடமளித்ததாகும்.

எனவே கருத்தும் கண்டிப்பும் மிக்க கஸ்டம்ஸ் அதிகாரிகளும், பாதுகாப்பு அதிகாரிகளும் துரிதமாக இயங்கவும் பழகியிருந்தார்கள். அதற்கும் மேலாக முகத்தைப் பார்த்தே ஆளை எடை போடும் ஆற்றலும் கொண்டிருந்தார்கள்.

தனஞ்செயனுக்கு இவையெல்லாம் நன்றாகத் தெரிந்தவைதாம். பயணிகளின் பெட்டிகள் ஒருபுறம் சோதனைக்குள்ளாகையில் பயணிகளே கூட விமானத்தில் ஏறுமுன் தனித்தனியே சோதிக்கப் படுவார்கள். ஆடைக்குள் ஏதாவது ஆயுதங்களை மறைத்து வைத்துள்ளார்களா என்று. அவர்களுடைய கைப்பைகள், பெட்டிகள் முதலியனவும் குண்டுகள், கத்திகள், துப்பாக்கிகள் இவற்றுக்காகச் சோதிக்கப்படும். இவ்வளவு முன்ஜாக்கிரதையாக இருந்த போதிலும் கூடச் சில சமயம் கண்ணிமைப்பு நேர அசிரத்தை ஒரு ஹைஜாக் அரக்கனுக்கு உதவி விடுவதும் உண்டு. இல்லாமலா இத்தனை



ஹைஜாக் நிகழ்ச்சிகள் பத்திரிகைகளில் அடிபடுகின்றன?

எனவேதான் விமான தளப் பாது காப்புப் பிரதம அதிகாரியைச் சந்தித்துத் தனக்கு ஏற்பட்டுள்ள சந்தேகத்தைச்சொல்லிப் பாதுகாப்பு நடவடிக்கைகளைத் தீவிரப்படுத்துமாறு கோர வேண்டியது தன் கடமை என எண்ணினான் தனஞ்செயன்.

பெண்களுக்கும் ஆண்களுக்கும் தனித் தனியே உள்ள சிறிய ஆய்வு அறைகளில் அனுபமாவும் மைக்கேலும் சோதனைக்குள்ளாகி அப்பால் செல்வார்கள். தாங்கள் ஏற வேண்டிய விமானம் புறப்படும்வரை, காத்திருக்கும் கூடத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருப்பார்கள். அங்கு சென்றுவிட்டால் மீண்டும் வெளியே வர முடியாது. விமானத்தில்தான் ஏறலாம். இவர்கள் விமானம் கிளம்ப இன்னும் சற்று நேரம் இருந்தது. அதற்கு முன்னால் பாதுகாப்பு அதிகாரியைச் சந்தித்து எச்சரித்துவிட்டு விரைந்து திரும்பி மைக்கேல், அனுபமாவுடன் சேர்ந்து கொண்டு விடலாம் என்று நினைத்து அங்வாறே இயங்கினான் தனஞ்செயன். அந்த நீக்ரோ, அரை நீக்ரோக்களின் கண்களில் தனது இந்த நடமாட்டம் புலப்படாதபடிக்கு எச்சரிக்கையுடன் செயல்பட்டவன், பாதுகாப்பு அதிகாரியிடம் பேசியதில் ஏமாற்றமடைந்து விரைந்து திரும்பும்போது, 'இந்தப் பயணத்தையே சில நாட்களுக்கு ஒத்திப் போட்டு விட்டால் என்ன?' என்று ஒரு கணம் எண்ணினான். அந்த நீக்ரோக்களை இந்த ஃப்ளைட் 909ல் பயணமாகுமாறு அனுப்பிவிட்டுத் தந்திரமாக இவர்கள் பின்தங்கி விடலாம். ஒலி பெருக்கி இம்மூவரின் பெயரையும் கூவி அழைக்காதிருக்க இன்றையப் பயணத்தைத் தாங்கள் ரத்துச் செய்து விட்டதாக டி. டபிள்யூ. ஏ.யின் விமானத் தள அலுவலகத்தில் கடைசி நிமிஷத்தில் கூறிக் கொள்ளலாம். பணம் நஷ்டமானால் போகிறது என்றும் இருக்கலாம். ஆனால் மைக்கேலுக்கு என்ன காரணம் சொல்வது? இந்த நீக்ரோக்களைப் பிடிக்கவில்லை என்று கூறிச் சிரிப்புக்கு ஆளாவதா? அல்லது அனுபமா அவனை உல்லாசப் பயணத்துக்கு அல்ல, உள்நோக்கத்துடன்தான் அழைத்துச் செல்கிறாள் என்று உணரச் செய்து தாழியை உடைப்பதா? திரளும் வெண்ணெயை அள்ளிக்கொள்ள ஆபத்துக்குத் துணிந்து, வந்தது வரட்டும் என்று பயணத்தைத் தொடர வேண்டியதுதான். மைக்கேலுக்கும், அனுபமாவுக்கும் அருகிலேயே இருந்து அவர்களுக்குத் தீங்கு ஏதும் நேராமல் கண்ணும் கருத்துமாகத் தன்னால் இயன்றவரை கவனித்துக் கொள்வதைத் தவிர வேறு மார்க்கம் ஏதும் புலப்படவில்லை அவனுக்கு. எனவே அவன் அவர்களுடன் சேர்ந்து விமானத்தில் ஏறி விட்டான்.

**வா**னவூர்தியினுள் உல்லாசப் பயணிகள் மட்டுமின்றி, பல்வேறு மகாநாடுகளுக்குச் செல்லும் அரசியல் தலைவர்கள், விஞ்ஞானிகள், டாக்டர்கள் என்றும் வர்த்தகப் பிரமுகர்கள், கலைஞர்கள் என்றும் பலதரப்பட்ட மக்கள் இருந்தனர். 'இப்போது குழந்தையைச் சமாதானப்படுத்திக் கொண்டிருக்கும் தாயும், நண்பனுடன் சீட்டாடும் ஒருவனும், மகாநாட்டின் தலைமையுரையைத் திருத்தத் தொடங்கியுள்ள டாக்டரும் இன்னும் விதவிதமான மனநிலையில் உள்ளோரும் ஹைஜாக் நடந்தால் நெஞ்சொருமித்து ஒரே கருத்துடையவர்களாகி விடுவார்கள் அல்லவா?' என்று நினைத்தான் தனஞ்செயன். 'இந்த ஆபத்திலிருந்து தப்பி உயிர் பிழைப்போமா என்ற ஒரே சிந்தனைதானே,



அத்தனை பேரையும் ஆக்கிரமித்துக் கொள்ளும்!'

இதற்குள் விமானம் 'ஜிவ்'வென்று மேலே கிளம்பி வானை அளக்க முற்பட்டு விட்டது. ஜன்னலோர ஆசனமாக இல்லாவிட்டாலும் அவனால், வெளியே நியூயார்க்கின் வானளாவும் கட்டிடங்கள் பொம்மை வடிவினவாக மாறுவதைக் காண முடிந்தது. நியூயார்க்கின் அழகுகளை யெல்லாம் தான் அனுபமாவுடன் சேர்ந்து அனுபவித்தது அவன் நினைவுக்கு வந்தது. உத்தியோகக் கலப்பற்று, காதலை முன்னிட்ட பயணமாக மட்டும் இந்த நியூயார்க் விஜயம் அமைந்திருந்தால் அனுபமாவின் அன்பை இதற்குள் முழுமையாகத் தன் வசப்படுத்தி யிருக்க முடியும். ஆனால் தன் கடமையை மறவாமல் அவளிடம் மைக்கேலை அழைத்துச் செல்ல உதவுமாறு கோரப் போக, அவளுக்கு மைக்கேலிடம் அவனை ஏமாற்றுகிறோமே என்பதால் அநுதாபம் அபரிமிதமாகப் பெருகுகிறது. அதனால் அவனிடம் இப்போதுகூடக் கைகோத்து இழைந்தபடிதான் தனக்கு முன்னால் அமர்ந்திருக்கிறாள். அமெரிக்க நோக்கில் பார்க்கும்போது கைகோத்துக் கொள்வதென்பது காதலாகி விடாதுதான். ஆனால் காதலுக்கு முதற்படியாவது சாத்தியம்தானே!

ஜன்னல் வழியே இப்போது நீல வானமும் அதனைப் பிரதிபலிக்கும் நீலக் கடலும்தான் கண்ணுக்கெட்டிய தூரம் வரை தெரிந்தன. ஒலி பெருக்கியில் ஹோஸ்டஸ்ஸின் குரல் — திரும்பத் திரும்பச் சொல்லி அலுத்துப் போன பாவத்தில் — பேசியது: ''விபத்து நேரும் என்று எதிர்பார்ப்பதற்கே இல்லை. என்றாலும் ஒருவேளை நடவாதது நடந்து விட்டால் என்ன செய்வது என்பதற்காகக் கற்றுத் தருகிறோம்...'' அந்தக் குரல் தொடர்ந்து பிராணவாயுக் கருவியைப் பயன்படுத்துவது எப்படி, கடலில் மூழ்காமல் மிதக்க லைஃப் ஜாக்கெட் அணிவது எப்படி என்றெல்லாம் விவரித்தது. மற்றோர் உபசரணைப் பெண் தன் தோழியின் குரல் வர்ணித்ததற்கு ஏற்ப அந்தக் கருவிகளை வேண்டா வெறுப்



பாகப் பயன்படுத்திக் காட்டினாள். அடிக்கடி விமானப் பயணம் செய்து பழகியவர்கள் இதை லட்சியம் செய்யவேயில்லை. இந்த நாடகத்தை முடித்துக்கொண்டு உபசரணைப் பெண் விமானத்தின் வால் பக்கம் செல்ல நடந்தபோது இடையில் அவளைத் தனஞ்செயன் தடுத்து நிறுத்திக் கேட்டான்: ''விமானத்தினுள் காற்றின் அழுத்தத்தைக் கட்டுப்படுத்தும் சாதனத்தில் பழுதேற்பட்டால் பிராணவாயுக் கருவியைப் பயன்படுத்தித் தப்புவதும், விமானத்தில் தீப்பிடித்துக் கடலில் விழ நேரிட்டால் லைஃப் ஜாக்கெட் அணிந்து தப்புவதும் ஒரு புறம் இருக்கட்டும். 'ஹைஜாக்' என்று நடந்தால் அதிலிருந்து எப்படித் தப்புவது? அதற்கு ஏதாவது வழி சொல்லித் தருகிறாயா?''

தனஞ்செயன் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு இவ்வாறு கேட்கவே, அவள் ஓரிரு விநாடிகளுக்கு என்ன சொல்வது, செய்வது என்று புரியாமல் மிரள மிரள விழித்தாள். அதற்கு அதிகமாக அவளை அச்சுறுத்துவது அழகல்ல என்ற முடிவுக்கு வந்தவனாக அவன் மெல்லப் புன்னகையை மலர விட்டான்.

அவள் தெம்பு பெற்று, ''நிஜமாகவே என்னை ஒரு கலக்குக் கலக்கி விட்டாய்!'' என்றாள். அவன் மூக்கில் ஆள்காட்டி விரலைப் பதித்து அழுத்தி, ''ஏமாற்று வித்தைகளை யெல்லாம் மூட்டை கட்டி வை! தெரிந்ததா?'' என்று அதிகாரத்தைப் பயன்படுத்துகிற தொனியில் கூறி, சிரிப்பினால் அதன் வீரியத்தைக் குறைத்தாள்!

# 22. கனல் மடிந்தது; தீ மூண்டது!

புகை பிடிக்கக் கூடாது என்ற அறிவிப்பு விளக்கு அணைந்ததும் தனஞ்செயன் சிகரெட் பாக்கெட்டை எடுத்து மைக்கேலின் பக்கம் நீட்டினான். அவன் மறுத்து விட்டதும் தனக்கு ஒன்று பற்ற வைத்துக் கொண்டு ஆசனத்தைப் பின்னால் நன்றாகச் சாய்த்தான். விமானத்தில் வழங்கப்படும் சிறு தலையணைகளுள் ஒன்றிரண்டைக் கழுத்துக்கு வசதியாக வைத்துக் கொள்ளும் சாக்கில் திரும்பிப் பார்த்தான். பின்னால் சற்றுத் தூரத்தில் ஸ்மித், கார்ட்டர் இருவரும் உல்லாசமாகச் சிரித்து இதற்குள்ளாகவே விமான உபசரணைப் பெண் ஒருத்திக்குத் தலைவலியாகவும் விளங்க ஆரம்பித்து விட்டிருந்தனர். அவர்களைக் கண்டதும் தனஞ்செயன் மீண்டும் தன் மனத்துடன் உரையாட ஆரம்பித்துவிட்டான்.

கத்திச் சண்டை போடுகிற ஒருவன் வாளைச் சுழற்றினால் மட்டும் போதாது. அதைப் பயன்படுத்துவதில் இரண்டு அம்சங்கள் உண்டு. தாக்குவது ஒன்று. பாதுகாத்துக் கொள்வது மற்றொன்று. எதிராளி எப்படி யெல்லாம் கத்தியை வீசுவான் என்பதை அனுமானித்து, அவன் கரத்தை நொடிக்கு முன்பே இவன் தன் கத்தியை மின்னல் வேகத்துடன் பாதுகாப்புக்குப் பயன்படுத்த வேண்டும். அடுத்து எதிராளி எதிர் பாராத தருணத்தில் வாளைப் பாய்ச்சவும் வேண்டும். இது கத்திச் சண்டையில் மட்டுமல்ல; பாதுகாப்புத் துறையின் துப்பறியும் பிரிவிலும் ஆரம்பப் பாடமாகும். எனவே எதிரி எதிர்ப்படுவதாகக் கருத இடம் இருக்கும் போதெல்லாம் அவன் எவ்வாறு நடந்து கொள்வான் என்று தனஞ்செயன் சிந்திக்க ஆரம்பிப்பான். எதிர் நடவடிக்கைகள் பற்றியும் யோசிப்பான். அதன்படிக்கு இப்போதும் அவன் தன் மூளைக்கு வேலை கொடுத்தான்.

''டூரிஸ்டுகள் என்று நெற்றியில் எழுதி ஒட்டாத குறையாக நடந்து கொள்ளும் இவர்கள் உண்மையாகவே பாகிஸ்தானிய அடியாட்களாக இருப்பின் எந்தவிதமாகச் செயல்படுவார்கள்?'' என்று அவன் தன் மனத்தினிடம் வினா எழுப்பினான்.

உள்ளம் பதில் சொல்லிற்று: ''பம்பாய் செல்ல வேண்டிய விமானத்தை ஹைஜாக் செய்து கொண்டு போய்க் கராச்சியில் இறங்க வைப்பார்கள். மைக்கேலின் அறிவாற்றல் இந்தியாவுக்குப் பயன்படாது போவதுடன் பாகிஸ்தானுக்குப் பயன்படுமாறும் கவனித்துக் கொள்வார்கள். இதற்கென மைக்கேல் சித்திரவதைக்கும் உள்ளாக நேரிடும்.''

''அதெல்லாம் சரிதான். ஆனால் உலகத்தின் கண் பாகிஸ்தானுக்கு இழுக்கு ஏற்படாதிருக்க வேண்டுமே? அதற்கென்ன செய்வார்கள்?'' என்று அவன் கேட்டான்.

அவனைப் பரிகசிப்பது போல் சிரித்துக் கொண்டே மனம் பேசியது: ''ஏன், உலகத்தின் பார்வையில் பாரத நாட்டுக்கு இழுக்கோ அல்லது அனுபமாவின் மீது மைக்கேலுக்குச் சந்தேகமோ எழாதிருக்க, நீ ஒரு நாடகமாடுவதாய் இருக்கிறாயல்லாவா? அது போல் பாகிஸ்தானியரும் ஒரு நாடகமாடி விட்டுப் போகிறார்கள்!''

# க்ளாக்ஸோ பேபி பவுடர்
# அன்னையின் அன்பென அணைக்கும் அதிமென்மை



**க்ளாக்ஸோ** மற்றும் 'பாப்பாவுக்குப் பயனுரும்' படைப்புகளின் நம்பகமான பாரம்பரியத்தில் இன்னொன்று...




மென்மையின் உருவம்! ஏனெனில்
உங்கள் பாப்பாவும் மென்மையானது தானே!
அது அதிசன்னமாகத் தயாரிக்கப்பட்டிருப்பதால்,
நீராட்டிய பின்னரும், இடுப்புத் துணியை
மாற்றிய பின்னரும் உங்கள் பாப்பாவின்
பட்டு மேனியில் மென்மையைப் பொழிகின்றது.
உங்கள் நம்பிக்கைக்குகந்த அதே க்ளாக்ஸோவின்
தயாரிப்பு.

100 கிராம் மற்றும் 400 கிராம் டின்களில் கிடைக்கிறது.

**பெற்ற மனமறியும் — பிள்ளைக் கனியமுதுக்குப் பேராதரவு — க்ளாக்ஸோ**

**க்ளாக்ஸோ**

CMGBT-4-203 TM



## தபால் நிலைய சேமிப்பு பாங்கு மூலம்

# ரூ. 20,50,000

## மதிப்புள்ள பரிசுகளை அடையுங்கள்

## மாபெரும் பரிசுகள்—வட்டியும் கூட!

1974 ஏப்ரல் 6-ம் தேதிக்கு முன்னதாக, தபால் நிலைய சேமிப்பு பாங்கில் 200 ரூபாய் அல்லது மேற்பட்ட தொகையுடன் கணக்கு ஒன்று ஆரம்பியுங்கள். 1974 செப்டம்பர் 30 வரை அதே தொகையை கணக்கில் வைத்திருங்கள்.

ஏற்கெனவே உங்களுக்குக் கணக்கு இருந்தால், 1974 ஏப்ரல் 6-ம் தேதிக்கு முன்னதாக, இருப்புத் தொகையை 200 ரூபாயாகவோ அதற்கு மேற்பட்டதாகவோ உயர்த்துங்கள்.

உங்கள் பெயரில் ஒன்றுக்கு மேற்பட்ட கணக்குகள் ஆரம்பித்துப் பரிசுகள் பெறும் வாய்ப்பை நீங்கள் அதிகரித்துக் கொள்ளலாம். (ஒரு தபால் நிலையத்தில் உங்களுக்கு ஒரு கணக்குக்குமேல் இருக்கக் கூடாது.)

நினைவிருக்கட்டும், ஒரே பெயரில் உள்ள எல்லாக் கணக்குகளிலும் டெபாசிட் செய்யப்படும் தொகை 25,000 ரூபாய்க்கு மேல் போகக்கூடாது.

உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவரும் ஒரு கணக்கு வைத்திருக்கட்டும்.

**முதல் பரிசு ரூ. 1,00,000**

| | | |
|---|---|---|
| 5 | இரண்டாவது பரிசுகள் ஒவ்வொன்றும் | ரூ. 50,000 |
| 10 | மூன்றாவது பரிசுகள் ஒவ்வொன்றும் | ரூ. 20,000 |
| 100 | நான்காவது பரிசுகள் ஒவ்வொன்றும் | ரூ. 5,000 |
| 1000 | ஐந்தாவது பரிசுகள் ஒவ்வொன்றும் | ரூ. 500 |
| 10,000 | ஆறாவது பரிசுகள் ஒவ்வொன்றும் | ரூ. 50 |

1975 ஜனவரியில் குலுக்கல் நடைபெறும்.



தேசிய சேமிப்பு கமிஷனர்,
த. பெ. எண். 96, நாக்பூர்
என்னும் முகவரிக்கு எழுதுங்கள்.

davp 73/631

''அந்த நாடகக் கதையைக் கொஞ்சம் சொல்லேன்!''

''பாகிஸ்தானிய அடியாட்கள் இவர்கள் என்று நீதான் இந்தக் கறுப்பர்களைச் சந்தேகிக்கிறாய். அதுவே உண்மையாகவும் இருக்கலாம். ஆனால் நீக்ரோக்களுக்குச் சம உரிமைகளைத் துப்பாக்கி முனையில்தான் பெற முடியும் என்று நம்பிச் செயல்படுகிற ஒரு கூட்டம் அமெரிக்காவில் இருக்கிறதல்லவா? அந்தப் 'பிளாக் பான்தர்' பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள் இவர்கள் இருவரும் என்று உலகை எண்ணச் செய்யும் பாகிஸ்தான் அரசு!''

''உம் அப்புறம்?'' என்று தனஞ்செயன் வியப்புடன் கேள்வி தொடுத்தான்.

''தங்களுடைய இயக்கத்துக்காகப் பணம் சம்பாதிக்கவே விமானத்தை ஹைஜாக் செய்து வந்ததாகவும் மிலியன் டாலர்களைப் பழைய நோட்டுக்களாகக் கராச்சியில் தங்களிடம் கிடைக்கச் செய்வதுடன் தங்களிடம் அனுதாபமுள்ள ஆப்பிரிக்க நாடு ஒன்றுக்கு இதே விமானத்தில் பயணப்பட வசதியும் செய்து தர வேண்டுமென்றும் இந்தக் கறுப்பர் இருவரும் கராச்சியில் விமானம் இறங்கியதும் நிபந்தனை விதிப்பார்கள்.''




''அதாவது பாகிஸ்தானிய அரசு சொல்லிக் கொடுத்தபடி!''

''கரெக்ட்'' என்று தனஞ்செயனை ஆமோதித்து விட்டு அவன் மனம் தொடர்ந்து கூறியது: ''நிபந்தனைக்கு உட்படாது போனால் இந்த விமானத்தில் உள்ள அனைவரும் சொர்க்க லோகத்துக்குப் போவதென்று அவர்களுக்கு விதிக்கப்பட்டிருந்தாலும் நரக வேதனையை அனுபவித்துக் கொண்டேதான் அங்கு போக முடியும் என்று. இந்த ஹைஜாக்கர்கள் மிரட்டுவார்கள். அதன்பின் இலட்சக்கணக்கான டாலர் பெறுமானமுள்ள விமானத்தைக் கொளுத்திச் சாம்பலாக்கி விடப் போவதாகவும் பயமுறுத்துவார்கள்.''







'' 'எங்களுக்கும் அந்த ஹைஜாக் ஆசாமிகளுக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை!' என்று அமெரிக்காவில் 'ப்ளாக் பான்தர்' தலைமைப் பீடம் அறிக்கை விடலாமில்லையா?''

''அறிக்கை விட்டால் என்ன? அலறித் துடித்தால் என்ன? யார் நம்புவார்கள்? புலி, பூனை வேஷம் போடுகிறது என்றுதான் உலகம் கருதும்.''

''சரி, நாடகம் மேலே எப்படித் தொடர்கிறது?'' என்று கேட்டான் தனஞ்செயன். ''அமெரிக்க அரசு மிலியன் டாலர்களைக் கொடுக்கிறதா?''

''அட அசடே!'' என்று அவன் மனம் அவனை நையாண்டி செய்தது. ''அந்த அளவுக்குப் பாக் அரசு நிலைமையை வளர விடுமா? அதற்கு முன்பாகவே புட்டோவின் விசேஷப் போலீஸார் இந்த ஹைஜாக்கர்கள் மீது பாய்வது போல் பாய்ந்து, பிடிப்பதுபோல் பிடிப்பார்கள். இந்தக் கறுப்பனும் அரைக்கறுப்பனும் அவர்களிடம் ஏமாந்து தோற்றது போல் நடிப்பார்கள். விளையாட்டாகக் கொஞ்சம் துப்பாக்கிச் சண்டையும் நடக்கும். எல்லாம் வெளியுலகத்துக்காக, கண் துடைப்பாக நிறைவேறும். பாகிஸ்தானிய அதிகாரிகள் இவர்களுடன் போராடி மகத்தான வெற்றி பெற்றது போல் தோன்றச் செய்து இவர்களைச் சிறைப்படுத்திக் கொண்டு செல்வார்கள். விசாரித்துத் தண்டனை வழங்கியதாகக் கூறுவார்கள். உலகம் இந்த நிகழ்ச்சியை மறக்க அவகாசம் அளித்து, பின்னர் இவர்களை விடுவிப்பதுடன் சன்மானமும் கொடுத்து அனுப்புவார்கள்!''

''சரி; ஹைஜாக் அரக்கர்களின் கதை அத்துடன் சுபமாக முடிந்தது. பிரயாணிகளின் விஷயம் என்ன?''

''ஹைஜாக் அரக்கர்களிடமிருந்து மீட்கப்பட்டுச் சில மணி நேரத்துக்குள்ளாகவே பயணிகள் அனைவரும் பயணத்தைத் தொடரவோ அல்லது

சொந்த நாடு திரும்பவோ அனுமதிக்கப்படுவார்கள். விமானக் குழுவினரும் விமானத்துடன் அமெரிக்கா திரும்பத் தடையிராது. என்றாலும் விசாரணை என்பதாக ஒன்று முதலில் நடக்கும். இந்த விசாரணைக்கு உள்ளாகி அனுப்பப்படும் பிரயாணிகளில் மூன்று நபர்கள் மட்டும் குறைவாக இருப்பார்கள். ஹைஜாக் அனுபவத்துக்குப் பின், பல நாடுகளிலிருந்தும் வந்த பயணிகள் பல்வேறு மன நிலைகளில் தனித்தனியே பிரிந்து வெவ்வேறு திசைகளில் சென்று விடுவார்களாதலின் தங்களில் மூவர் குறைவதை யாரும் கவனிக்கப் போவதில்லை!''

''புரிகிறது! புரிகிறது! சிறிது காலம் கழித்து அமெரிக்க அரசோ அல்லது இந்திய அரசோ விழித்துக் கொண்டு, 'தனஞ்செயன், அனுபமா, மைக்கேல் ஆகியோர் என்ன ஆனார்கள்?' என்று பாக் அதிகாரிகளை வினவினாலும் பலன் இராது. 'எந்தப் பயணியையும் நாங்கள் தடுக்கவில்லை; அவரவரும் தத்தமக்கு விருப்பமானபடி பயணத்தைத் தொடர அனுமதித்து விட்டோம்' என்றுதான் பதில் கிடைக்கும். கராச்சியிலிருந்து நில மார்க்கமாகவா, கடல் மார்க்கமாகவா, ஆகாய மார்க்கமாகவா, எந்த விதமாக இம்மூவரும் சென்றார்கள் என்பதையே நிர்ணயிப்பது சிரமமாக இருக்கும். இதற்கிடையில் அனுபமாவும் மைக்கேலும் இரகசியமான, பாதுகாப்பான இடத்துக்குப் பாகிஸ்தானியரால் அழைத்துச் செல்லப்பட்டு வலுக்கட்டாயமாக ராக்கெட் விஞ்ஞான நுணுக்கங்கள் பலவற்றை வெளியிடுமாறு வற்புறுத்தப்படுவார்கள். பலாத்காரத்துக்கு உள்ளாவார்கள். இந்தியாவின் ஒற்றனை தனஞ்செயன் புதையுண்ட இடத்தில் புல் முளைத்துப் போனாலும் அதிசயமில்லை!''

தன் மனத்துடன் தான் நடத்திய உரையாடலின் முடிவில் பூமியின் ஆழத்தில் தான் புதையுண்டு கிடப்பது போன்ற கற்பனை தனஞ்செயனுக்குச் சிலிர்ப்பை ஏற்படுத்தியது. எந்த காரணத்துக்காக அவன் மைக்கேலையும் அனுபமாவையும் பாரதத்துக்கு அழைத்துப் போகிறானோ, அந்த உத்தேசம் தோல்வியுறுவதுடன் அந்தத் தோல்வியே பாகிஸ்தானின் வெற்றியாகவும் மாறலாம் என எண்ணிய போது கோபம் பொத்துக் கொண்டு வந்தது அவனுக்கு.

'ஆனால் இத்தனையும் சாத்தியக் கூறுகள் பற்றித் தான் சிந்தனையில் ஆழ்ந்ததால் ஏற்பட்ட மனத் தோற்றங்கள்தாமே' என்று ஆறுதல் அடைந்தான். 'இவர்கள் மெய்யாலுமே ஆயுதம் ஏந்திய ஹைஜாக்கர்களாயின் விமானத் தளப் பாதுகாப்புக்களை மீறி இந்த விமானத்தில் எப்படி ஏறி இருக்க முடியும்? ஆயுதம் ஏதும் இவர்களிடம் இல்லையெனில் இவர்கள் மேற்கொள்ளக் கூடிய ஹைஜாக் முயற்சி எப்படி வெற்றி பெறும்?'

இந்த விதமாக அவன் மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டே புகைத்து முடிந்த சிகரெட்டை ஆஷ்டிரேயில் அணைத்துப் போட்டான்.

அந்தக் கனல் மடிந்த கணத்திலேயே பெண் குரலின் 'வீல்' என்ற பீதி நிரம்பிய ஓர் அலறல் எழும்பி, அவன் நெஞ்சை மட்டுமல்ல, அந்த விமானத்திலிருந்த பயணிகள் அனைவரது உள்ளங்களையுமே 'குப்'பென்று பெரு நெருப்பாய்ப் பற்றி எரியச் செய்தது. (தொடரும்)

# What do seven different tyre companies have in common?




That's it. Nircord - India's first nylon tyre cord.
Nircord is the super-strengthener for all better-grade tyres made in India today.

**nircord**®

® Regd. Trade Mark

**Nirlon Synthetic Fibres & Chemicals Ltd.**

Nirlon House, 254-B, Dr. Annie Besant Road, Bombay-400 025.

Interpub/NIR-C/46A/74

# ஆசைகள் முடிவதில்லை

கதை : கௌசிகன்

சித்திரம் : சூர்யா..

11


















ஊரில் ஒதுக்குப்புறமான ஒரு வீட்டின் மாடியிலுள்ள ஓர் அறைக்குக் கொண்டு வரப் படுகிறான் சதீஷ்.
முனிசாமி... எதுக்கு இவ்வளவு கட்டு, போதும் கிளம்பு...


சதீஷுக்கு நினைவு திரும்பிய போது....
உடலை அசைக்கவே முடிய வில்லையே. என்னை எங்கேயோ கொண்டு வந்து சிறை வைத்தி ருக்கிறார்கள்... எங்கே...?


ஏதோ ஒரு பழைய வீட்டின் நான்காவது மாடியில் ஒரு அறை இது. பாவிகள் என் வாய்க் கட்டைக் கூட அவிழ்க்க வில்லையே... என்னமாக வலிக்கிறது...?


மேனகாவை எங்கே அனுப்பி இருப்பான்? அல்லது எனக்காக நடிக்கப்பட்ட நாடகமா அது?... உடலை முறுக்கி விடுபட முயன்றால் கயிறு சதையை அறுக்கிறது....


முனிசாமி இந்த அறைக்கு வெளியே காவலிருப்பான், சோமுவை எதிர் பார்த்துக் கொண்டு. இனி இவர்கள் என்னை உயிரோடு வெளியே விட மாட்டார்கள். பாவம் மல்லிகா... ம்...


கட்டுக்களைத் தளர்த்தி விடுபட முயன்றது, தாங்க முடியாத வலி, வியர்வை, மூச்சுத் திணறலில் முடிந்தது. அப்போது.. கண்களைக் கூச வைக்கும் ஒளி திடீரென்று வெள்ளமாகப் பாய்கிறது அறையில்...
தொடரும்



பாண்டே கிராண்டு ஹோட்டலின் முதல் மாடியிலிருந்த திறந்த வெளியில் வந்து நின்றார்.

குளிர் காலத்து மாலை நேரம். சில்லென்ற காற்று மைதானத்திலிருந்து வீசிக் கொண்டிருந்தது. அவர் முன்னே அகன்ற சௌரிங்கி வீதியில் பஸ்களும் கார்களும் பரபரப்புடன் ஓடிக் கொண்டிருந்தன. அலுவலகங்கள் மூடும் நேரம். அவற்றிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்த ஜனங்கள் நடைபாதைகளில் மொய்த்துக் கொண்டிருந்தார்கள். மேற்கே அடிவானத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்த சூரியனை ஹூக்ளி நதிக்கரையில் வரிசையாக அமைந்திருந்த தொழிற்சாலைகளிலிருந்து கிளம்பிய புகைப் படலம் மறைத்தது.

திடீரென்று தொலைவிலிருந்து பல்லாயிரம் மக்கள் எழுப்பிய கோஷங்கள் ஒலித்தன. ''புரட்சி வாழ்க!... சுரண்டல் ஒழிக!''

பாண்டே கைப்பிடிச் சுவரைப் பிடித்துக் கொண்டு எட்டிப் பார்த்தார். சௌரிங்கி முழுதும் மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. வடக்கிலிருந்தும், தெற்கிலிருந்தும் ஊர்வலமாக வந்து கொண்டிருந்த ஜனங்கள் வீதி முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தார்கள். அந்த ஜன சமுத்திரத்தில் இடையிடையே ரத்தச் சிவப்பு நிறக் கொடிகளும், கோஷங்கள் பொறிக்கப்பட்ட பானர்களும் காணப்பட்டன. அந்த ஜன வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்ட கார்களும் பஸ்களும் மேலே முன்னேற முடியாமல் அங்கங்கேயே நின்று விட்டன.

பாண்டே சற்று நேரம் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டு நின்றார். இத்தகைய பெரிய ஜனத்திரளை அவர் இதுவரையில் கண்டதில்லை. அவர் பாட்னாக்காரர். கல்கத்தாவுடன் ஒப்பிடும்போது பாட்னாவை ஒரு கிராமம் என்றே சொல்லலாம். தம் முன்னாலே கூடியிருந்த மக்கள் தொகை பாட்னாவின் மொத்த ஜனத் தொகையை விட அதிகமாயிருக்கும் என்று பாண்டேக்குத் தோன்றியது.

ஊர்வலத்திலிருந்த மக்களின் முகங்களிலும் அவர்கள் எழுப்பிய கோஷங்களிலும் எதிர்ப்புணர்ச்சியும் கோபமும் கொந்தளித்துக் கொண்டிருப்பதாகப் பாண்டேக்குத் தோன்றியது.

ஆயிரக் கணக்கான மக்களின் பொருமையும் வெறுப்பும் வன்முறையில் வெளியானால் அவர்களுக்கு முன்னால் ஒருசில நூறு பணக்காரர்கள் எம்மாத்திரம்!

# ஒரு நம்பிக்கை விளைவித்த நசுவாதம்

எஸ். கிருஷ்ணமூர்த்தி

இதை நினைக்கும்போதே பாண்டேக்கு நடுக்கம் ஏற்பட்டது. காரணம் இன்று அவரும் 'உடையவர்கள்' கூட்டத்தில் ஒருவர்தாம். அவரிடம் இப்போது — பலரிடம் இல்லாத, பலர் விரும்புகிற — பல பொருட்கள் இருந்தன — குடிசை வீடுகளும், ஒருசில ஒட்டு வீடுகளுமே கொண்ட அவரது கிராமத்தில் ஒரு பெரிய இரட்டை மாடி வீடு, அதைச் சுற்றி ஓர் அழகிய தோட்டம். வீட்டில் ஃபிரிஜிடேர், ரிக்கார்டு பிளேயர், வீடு நிறைய வேலைக்காரர்கள் இத்தியாதி, இத்தியாதி... இன்னும் அவர் சொந்தக் கார் வாங்கவில்லை. ஆனால் விரைவில் அதுவும் கிடைத்து விடும். பெண் கல்லூரியில் படிக்கிறாள். பெரிய பையன் இஞ்சினீரிங் கல்லூரியிலும் சிறியவன் ஒரு பப்ளிக் ஸ்கூலிலும் படிக்கிறார்கள். எம்.எல்.ஏ.என்ற முறையில் அரசாங்கம் அவருக்குப் பாட்னாவில் ஒரு வசதியான தனி விடுதியை அளித்திருக்கிறது....

எதிரில் ஊர்வலமாக வந்து கொண்டிருந்தவர்களில் பெரும்பாலோருக்குக் குடும்பம் இருந்தது. ஆனால் இருக்க வீடு இல்லை; நிலையான, போதுமான வருமானம் இல்லை. உடை இல்லை; வேளாவேளைக்கு வயிற்றில் சீறிக் கொண்டு எழும் பசியைத் தீர்த்துக் கொள்ள உணவு இல்லை. இன்னும் எவ்வளவோ இல்லை... இல்லாதவர்களின் படை கடல் போல் பொங்கி எழுந்தால் தம் போன்றவர்களின் நிலை என்னவாகும் என்று நினைக்கவே பயமாக இருந்தது பாண்டேக்கு.

நேற்று காலை பாட்னாவில் இருந்த பாண்டே இன்று கல்கத்தாவில் இருக்கிறார். காரணம்...?

**பா**ண்டே பீஹாரின் ஆளும் கட்சியைச் சேர்ந்த எம். எல். ஏ. அங்கே முதன் மந்திரி வக்கிரருக்கு எதிராகக் கட்சிக்குள்ளேயே ஓர் அணி உருவாகிக் கொண்டிருந்தது. அந்த அணியின் தலைவர் மிகிரர் பாண்டேயின் நெருங்கிய நண்பர் மட்டுமல்ல; அரசியல் குருவும்கூட. அப்போது ராஜ்ய சட்ட சபைக் கூட்டம் நடந்து கொண்டிருந்தது. அதில் எதிர்க் கட்சிகள் மந்திரி சபையின்மேல் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரப்போவதாக அறிவித்திருந்தன. அத் தீர்மானம் வோட்டுக்கு விடப்படும்போது அதற்கு ஆதரவாக வாக்களித்து மந்திரி சபையைக் கவிழ்த்துவிடத் திட்டமிட்டிருந்தார் மிகிரர். நம்பிக்கையில்லாத் தீர்மானம் ஓரிரண்டு ஓட்டுக்கள் வித்தியாசத்தில் நிறைவேறும் வாய்ப்பு இருந்தது. இவ்விளைவைத் தடுக்க முழு மூச்சுடன் செயற்படத் தொடங்கினார் வக்கிரர்.

வக்கிரர் அரசியலில் ஒரு குள்ளநரி என்று பட்டம் பெற்றிருந்தார். இதற்குக் காரணம் இருந்தது. சுதந்திரப் போராட்ட காலத்தில் உண்மையான தேசபக்தராகவும் தியாகியாகவும் சேவை செய்த அவர் நாட்டின் விடுதலைக்குப் பிறகு முற்றிலும் மாறிப் போய் விட்டார். தம் பழைய சேவைகளை மூலதனமாகக் கொண்டு தம்மை வளர்த்துக்கொள்வதே அவருடைய நோக்கமாகி விட்டது. சுதந்திரத்துக்குப் பிறகு பீஹாரில் ஏற்பட்ட எல்லா மந்திரி சபைகளிலும் அவர் உதவி மந்திரியாகவோ, மந்திரியாகவோ, முதன் மந்திரியாகவோ இருந்து வந்திருக்கிறார். இதற்காக அவர் கட்சி மாறிய தடவைகள் எத்தனையோ! பாட்னாவில் சொல்லிக்கொள்வார்கள்: ''ராஜ்யத்தில் எந்தக் கட்சி பத



விக்கு வந்தாலும் மந்திரி சபையில் வக்கிரருக்கு ஓர் இடம் உண்டு'' என்று!

மிஸ்ரரின் ஓரிரு ஆதரவாளர்கள் நம்பிக்கையில்லாத் தீர்மானத்துக்கு ஆதரவாக ஓட்டளிப்பதைத் தடுத்து விட்டால் தீர்மானம் தோற்றுவிடும்; மந்திரி சபையும் அந்தக் கண்டத்திலிருந்து பிழைத்து விடும். அடுத்த சட்டசபைக் கூட்டம் ஆரம்பமாவதற்குள் மிஸ்ரரின் ஆதரவாளர்களுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்தோ, அல்லது அவர்களைப் பயமுறுத்தியோ மிஸ்ரரின் குழுவைக் குலைத்து விடுவது வக்கிரருக்கு ஒரு பெரிய காரியமல்ல. இம்மாதிரி எத்தனையோ ஆபத்துக்களை வக்கிரர் தம் அரசியல் சாகசங்களால் சமாளித்திருக்கிறார்.

அவருடைய கவனம் பாண்டேயின் பக்கம் திரும்பியது. அவரும் பாண்டேயும் ஒரு காலத்தில் தோளோடு தோள் நின்று சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்டவர்கள். ஆகஸ்ட் புரட்சிக்குப் பிறகு இருவரும் ஒன்றாக அலிப்பூர் மத்திய சிறையில் சில ஆண்டுகள் தண்டனை அனுபவித்தவர்கள். இருந்தாலும் பாண்டே மிஸ்ரருக்கு மிகவும் கடன் பட்டவர் என்பதும் அவரால் மிஸ்ரரின் வார்த்தையை மீற முடியாது என்பதும் வக்கிரருக்குத் தெரியும். ஆகவே பாண்டே நம்பிக்கை யில்லாத் தீர்மானத்தை ஆதரித்து ஓட்டளிப்பதைத் தவிர்க்க ஒரு திட்டம் வகுத்தார் வக்கிரர். அதன்படி அவருடைய அந்தரங்கத் தூதன் ஒருவன் பாண்டேயை ரகசியமாகச் சந்தித்தான். வக்கிரரை எதிர்க்காமல் இருந்தால் பாண்டேக்கு ஏற்படக் கூடிய லாபங்களை அவன் விவரித்தான்.— வெளிநாடுகளுக்குச் செல்லும் தூதுக் கோஷ்டிகளில் உறுப்பினர் பதவி, அரசாங்கத் தொழில் நிறுவனம் ஒன்றில் டைரக்டர் பதவி, வரவிருக்கும் தேர்தலில் ஆளும் கட்சி வேட்பாளராக நியமனம், இன்னும் இவைபோன்ற பல சலுகைகள்... இவற்றுக்கெல்லாம் அச்சாரமாக ஐயாயிரம் ரூபாய் உடனடியாகக் கைமாறின. பாண்டே செய்ய வேண்டியதெல்லாம் சில நாட்கள் பாட்னாவை விட்டுப் போய்த் தலைமறைவாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான். பீஹார் ராஜ்யத்துக்குள் அவர் எங்கிருந்தாலும் மிஸ்ரரின் ஆட்கள் எப்படியோ அவரை மோப்பம் பிடித்துச் சட்டசபைக் கூட்டத்துக்கு வலுக் கட்டாயமாக இழுத்துக் கொண்டு வந்து விடுவார்கள். அவர்களுடைய பிடியிலிருந்து தப்புவதற்காக அவர் ரகசியமாகக் கல்கத்தாவுக்குப் போய்விட வேண்டும்...

மிஸ்ரரையே அண்டியிருந்தால் இத்தகைய அரிய வாய்ப்புக்கள் கிடைக்குமா? எந்தக் கட்சியில் இருந்தால் தமக்கு அதிக லாபம் என்பது பாண்டேக்குப் புரிந்தது. அவர் வக்கிரரின் திட்டத்துக்கு இணங்கிவிட்டார்.

ஒவ்வொரு சமயம் அவருக்குத் தோன்றும் — தான் போற்றத் தக்கது, பாதுகாக்கத் தக்கது எல்லாவற்றையும் இழந்து விட்டதாக. ஒரு குற்ற உணர்வு அவருக்குக் குறுகுறுக்கும். தாம் கனவுகள் கண்ட — லட்சிய வெறியுடன் செயல்பட்ட—அந்த நாட்களின் நினைவு சுமையாக வந்து அவருடைய நெஞ்சை அழுத்தும்...

ஆனால் சில கணங்கள்தான் இந்தக் குற்ற உணர்வும் வேதனையும் இருக்கும். உடனே அவர் தம்மைச் சமாளித்துக் கொண்டு விடுவார். லட்சியத்தைக் கட்டிக்கொண்டு அழுதால் பெரிய மாடி வீடு கட்டிக் கொள்ள முடியுமா? குழந்தைகளுக்கு மேல்தரக் கல்வி அளிக்க முடியுமா? மனைவிக்கு அவள் விரும்பியபடி யெல்லாம் தங்க நகைகள் வாங்கிக் கொடுக்க முடியுமா?

இப்படித் தம்மைத் தாமே தேற்றிக்கொள்பவருக்கு வேறு பல சொந்தச் சபலங்கள் சிலவும் உண்டு. ஆனால் அவற்றை நிறைவேற்றிக் கொள்ளப் பாட்னா தகுந்த இடமாக இல்லை. ஏனெனில் அங்கு எல்லோருக்கும் பாண்டேயைத் தெரியும். அவர் காந்திஜியின் வாரிசு என்று சொல்லிக் கொண்ட ஒரு கட்சியின் பிரதிநிதி. அதற்கு ஏற்றபடி வேடம் போட வேண்டிய நிர்ப்பந்தம் அவருக்கு இருந்தது. பாட்னாவில் ஆடம்பரமாக வாழ முடியாது. படாடோபமான உடைகள் அணிய முடியாது; மதுபானங்கள் அருந்த முடியாது; கண்ணியமற்றவை என்று கருதப்படும் காரியங்களைச் செய்ய முடியாது.

ஆனால் கல்கத்தாவில் இத்தகைய தடை ஏதும் இல்லை யல்லவா? இங்கே லட்சக் கணக்கில் நிறைந்து கிடந்த மனித சமுத்திரத்தில் அவரை யாரும் அடையாளம் கண்டு கொள்ள மாட்டார்கள்.

யாருமே இல்லையா?

இருக்கிறான்; அவருக்கு அறிமுகமான, அவரை அடையாளம் கண்டு கொள்ளக்கூடிய ஓர் ஆள் இங்கே இருக்கிறான்; இந்த ஹோட்டலிலேயே இருக்கிறான் — வெயிட்டராக வேலை பார்க்கும் துளசி பானர்ஜி.

பாண்டேயும் வக்கிரரும் அலிப்பூர் சிறையில் இருந்த காலத்தில் அவர்களோடு கூட இருந்தவன் துளசி பானர்ஜி. அவர்களைவிட ஏழெட்டு வயது இளையவன். அவன் அதிகம் படிக்கவில்லை. அந்தக் காலத்தில் அவனும் தேசபக்தியால் தூண்டப்பட்டு வறுமையில் உழன்ற தன் விதவைத் தாயையும் சகோதர சகோதரிகளையும் மறந்து விட்டு விடுதலைப் போராட்டத்தில் குதித்து விட்டான். சிறையில் அவனை 'சி' வகுப்பில் வைத்தார்கள். 'ஏ' வகுப்பில் இருந்த வக்கிரருக்கும் பாண்டேக்கும் பணிவிடை செய்ய அவன் அமர்த்தப்பட்டான். அவர்கள் மேற்குடியைச் சேர்ந்தவர்கள்; உயர்ந்த படிப்புப் படித்தவர்கள்; வசதியாக வாழும் வாய்ப்பை உதறித் தள்ளிவிட்டுச் சிறைவாசத்தை மேற்கொண்டவர்கள். பெருந் தலைவர்களுடன் பழகும் வாய்ப்புப் பெற்றவர்கள் — இந்தக் காரணங்களால் பானர்ஜிக்கு அவர்களிடம் அபாரமான பக்தி. அவன் அவர்களைக் காந்திஜிக்கு அடுத்தபடியாக மதித்தான். அவர்களுடைய தேசப் பற்றும் அடக்கமும் எளிமையும் அவனைப் பரவசப்படுத்தின.

முதல் நாள் பாண்டே ஹோட்டலுக்கு வந்ததும் வந்த களைப்பைப் போக்கிக்கொள்ள ஒரு விஸ்கிக்கு ஆர்டர் கொடுத்தார். அதைக் கொண்டு வந்தது பானர்ஜிதான். அவன் விந்தி விந்திக் கொண்டு அறையில் நுழைந்ததுமே அடையாளம் கண்டுகொண்டார்.

அவள் மென்மையானவள்... அவள் ஒரு புதிர்...
அவள் மிருதுவானவள், உறுதியானவள்...
தீப்போன்றவள்... அவள் பெண்மையே உருவானவள்...

பட்டுப் போன்ற டால்க்... அன்னைப்போல மிருதுவானது. உங்கள் மேனியைத் தழுவி அரவணைப்பது. உங்களை மோகன லாகிரியில் ஆழ்த்தும் அருமையான புது நறுமணம் கொண்டது. அதுவே வெய்ல் ஆ:ப் லவ். ஹேலோ மட்டுமே அளிப்பது. அதைத் தாராளமாக மேனியெங்கும் தூவிக் கொள்ளுங்கள். ஹேலோவிற்கெனவே பிரத்யேகமாக உருவான அதன் நறுமணம் நீண்ட நேரம் உங்களைத் தழுவி, உங்களைச் சுற்றிலும் கமகமவென வீசிக் கொண்டிருக்கும். வெய்ல் ஆ:ப் லவ் உங்களை அலங்கரிக்-கட்டும். ஹேலோ மட்டுமே அளிக்கும் வாசமுள்ள அன்புத்திரை அது.

ஹேலோ வெய்ல் ஆ:ப்
லவ் டால்க் வாசமுள்ள
அன்புத்திரை...
அன்னைப் போல
மிருதுவானது.

அவளுக்கு உகந்தது
# ஹேலோ
வெய்ல் ஆ:ப் லவ்
டால்க்




G.I.TH (R)

சுமார் முப்பது வருட இடைவெளிக்குப் பிறகு அவர் அவனைப் பார்க்கிறார். அதே நோஞ்சான் தேகம். முதுகில் சற்றுக் கூனல் விழுந்திருந்தது. வறுமை அளித்த பரிசாக அவன் முகமெங்கும் சுருக்கங்கள். மற்றப்படி அவனுடைய தோற்றத்தில் மாற்றமில்லை.

அவனை அடையாளம் கண்டு கொண்டதும் அவர் ஒரு குற்ற உணர்வால் பாதிக்கப்பட்டுத் தமக்குள் குன்றிப் போனார். தம் குறைகளும், பலவீனங்களும் அப்போதுதான் விசுவ ரூபம் எடுத்து நிற்பது போல் தோன்றியது அவருக்கு.

நல்லவேளை, பானர்ஜி அவரை அடையாளம் கண்டு கொண்டதாகத் தெரியவில்லை.

ஏன்? இந்த நீண்ட இடைக் காலத்தில் அவர் எவ்வளவோ மாறிப்போய் இருந்தார். முன்பு பானர்ஜியைப் போலவே நோஞ்சலாக இருந்த அவர் இப்போது வசதியானவாழ்க்கையின் விளைவாகப் பருத்துப் போயிருந்தார். சில வருடங்களாக அடர்த்தியான மீசை வளர்த்துக் கொண்டிருந்தார். .முன் தலையில் விழுந்திருந்த வழுக்கை அவருக்குப் பெரிய மனிதத் தோற்றத்தை வேறு அளித்தது.

அவன் தன்னை அடையாளம் கண்டு கொள்ளவில்லை என்ற தைரியத்தில் அவர் தம் முன் வைக்கப்பட்டிருந்த தட்டிலிருந்து சோடாவை எடுத்துத் தம்ளரில் ஊற்றிக் கொள்ளத் தொடங்கினார். ஆனால் அவருடைய கை வெடவெட வென்று நடுங்கியது. தம் பூர்வாசிரம வாழ்க்கையை நினைவூட்டிய பானர்ஜி முன் நிற்கும்போது அந்த லட்சிய வாழ்க்கையிலிருந்து தம் வீழ்ச்சியைக் குறிக்கும் விஸ்கியைச் சாப்பிட அவருக்குக் கூச்சமாக இருந்தது. அவனை அங்கிருந்து அனுப்பிய பிறகுதான் அவரால் தயக்கமின்றி விஸ்கி அருந்த முடிந்தது.

நன்றாக இருட்டி விட்டது. எஸ்பிளனேட் பகுதியின் மாடிக் கட்டிடங்களின் மீது நியான் விளக்குகளின் நடனத்தைப் பார்த்து ரசித்தவாறே உட்கார்ந்திருந்த அவர் அந்தப் பக்கம் வந்த ஒரு வெயிட்டரைக் கூப்பிட்டார். "ஏய், இங்கே வா! உன் பேர் என்ன?"

"மதன் தாஸ்" என்றான் வெயிட்டர்.

"'கேபரே' எப்போது ஆரம்பிக்கும்?"

"இன்னிக்கு 'கேபரே' கிடையாதுங்க!"

"ஏன்?"

"'கேபரே'யிலே ஆடற பொண்ணு சியாம்பஜாரிலேருந்து வரணும். இன்னிக்கு அங்கே திடீர்னு ஏதோ ரகளையாம். பஸ், கார் எல்லாம் நின்னு போச்சாம். அந்த நிலையிலே வீட்டை விட்டுக் கிளம்பவும் பயமா இருக்காம். ஆகையாலே இன்னிக்கு ஆட வரலேன்னு போன் பண்ணிட்டா... ஆனா உங்களுக்குக் 'கேபரே' பார்க்கணும்னா இருட்டறைக்குப் போகலாமே!"

"இருட்டறையா?" பாண்டே திகைத்தார்.

மதன்தாஸ் சிரித்தான். "ஆமாங்க. ஆனா 'இருட்டறை'ன்னா வெறும் இருட்டறையில்லேங்க; அந்தப் பேருள்ள ஒரு ஹோட்டல். பக்கத்திலே பார்க் தெருவிலேதான் இருக்கு. இதே ஹோட்டல் முதலாளிதான் அதையும் நடத்தறாரு."

"சரி, அந்த இடத்தைக் காட்டறியா?"

"எனக்கு இங்கே டியூட்டி இருக்குங்களே? உங்க அறையிலே டியூட்டி பார்க்கிறவன் காந்திதானே?"

"இல்லையே, ஏதோ பானர்ஜின்னான்!"

மதன்தாஸ் சிரித்தான். "ஆமாமா, அவனைத்தான் நாங்க 'காந்தி'ன்னு கூப்பிடுவோம்... அவனை உங்களோட அனுப்பவா?"

"வேண்டாம், நீயே வாயேன்!"

மதன்தாஸ் சற்றுத் தயங்கிச் சொன்னான்: "சரிங்க... மானேஜர் கிட்டே சொல்லி விட்டு வந்திடறேன்."

இருவரும் பார்க் தெருவை நோக்கி நடந்தார்கள். மதன்தாஸிடம் தம் தேவைகளைத் தயக்கமில்லாமல் தெரிவிக்கலாமென்று பாண்டேக்குத் தோன்றியது. அவர் மெதுவாக ஆரம்பித்தார். "'கேபரே'க்கு அப்புறம் பொழுது போக்க..."

மதன் தாஸின் உதடுகளில் ஒரு குறும்புச் சிரிப்பு நெளிந்தது. அவர் எதைக் குறிப்பிடுகிறார் என்று அவனுக்குப் புரிந்து விட்டது. அவன் சொன்னான்: "அதுக்கென்னங்க! அங்கே 'கேபரே' ஆடற பொண்ணையே ஏற்பாடு செஞ்சுட்டாப் போச்சு!"

காரியம் இவ்வளவு சுலபமாய் முடிந்துவிட்டது பற்றிப் பாண்டேக்குச் சந்தோஷம்.

**சமாதானம்**

வியட்நாம் அலை வரிசையில்
நீங்கள் கேட்டு வந்த
வேதனைப் பாடல்களின்
ஒலிபரப்பு
இத்துடன் முடிகிறது.
மீண்டும்
வேறு அலை வரிசையில்
இதே பாடல்கள்
தொடரும் வரை
நேயர்களுக்கு வணக்கம் கூறி
விடை பெறுவது...

"கண்ணீர்ப் பூக்கள்" என்ற தலைப்பில் மு. மேத்தா எழுதியுள்ள புதுயுகக்கவிதைகளின் தொகுப்பு, நூலாக வெளி வந்திருக்கிறது. அதிலுள்ள பல பாடல்களுள் மாதிரிக்கு ஒன்றே மேலே தரப்பட்டுள்ளது. கவிதை அமைப்பை விடக் கருத்து அமைப்புக்கே அதிக முக்கியத்துவம் தரப்படும் 'மாட்' (Mod) கவிதைகள் அடங்கிய இந்நூலும் மிக அழகிய நவீன முறையில் தயாராகியிருக்கிறது.

விற்பனை உரிமை; தமிழ்ப் புத்தகாலயம் 576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5 விலை ரூ. 5.



மேலே போகும் எல்லாமே எப்படியும் கீழே வந்து ஆக வேண்டும் என்ற புவியீர்ப்புக் கொள்கையை நாம் வென்று விட்டோம்! — விலைவாசிகளைப் பாருங்களேன், எப்போது கீழே வரும்?

பிளிட்ஸ் — பாலி




---

நடைபாதையில் இது பற்றித் தொடர்ந்து பேச விரும்பாமல் அவர் பேச்சை மாற்றினார். ''அது சரி, அந்த வெயிட்டர் பானர்ஜியை ஏன் 'காந்தி'ன்னு கூப்பிடறீங்க?''

''அதுவா? அவன் தேசப் பித்துப் பிடித்தவன்; ஒரு லட்சியவாதி. சின்ன வயசிலே தேசத்துக்காக ஜெயிலுக்குப் போனான். அங்கேயே பல தேச பக்தர்களோடே, தலைவர்களோடே எல்லாம் பழகினான். இன்னும் தேச பக்தியையும், பழைய லட்சியங்களையும் விடாப் பிடியாகப் பிடிச்சுக்கிட்டிருக்கான். அவன் ஏழை. பெரிய குடும்பம் வேறே. அப்படியும் அவன் கவலைப்படறதெல்லாம் தேசத்தைப் பற்றித்தான். எப்போப் பார்த்தாலும் காந்தியைப் பற்றித்தான் பேசுவான். இங்கே வயித்துப் பிழைப்புக்காக மில் துணியிலே டிரஸ் போட்டுக்கறான். டியூட்டி முடிஞ்சப்பறம் கதர்த் துணிதான் உடுப்பான். இப்பவும் வீட்டுலே தினம் ரெண்டு மணி நேரம் நூல் ' நூக்கறான்... இன்னொரு அதிசயம் என்ன தெரியுங்களா?... பெரிய மனுசங்க வர்ற ஹோட்டல் இது. அதுலேயும் வெளிநாட்டுக்காரங்க ரொம்பப் பேர். அநேகமாக எல்லாருமே குடிக்கறவங்க. அவங்கள்ளே சிலபேர் பிரியப்பட்டு எங்களுக்கு இனமா 'டிரிங்க்' கொடுப்பாங்க. ஆனா அவன் குடிக்கறதே இல்லே. அதுமட்டுமில்லே. இங்கே வர்ற விருந்தாளிங்க குடுக்கிற 'டிப்'பைக் கூட அவன் வாங்கிக்க மாட்டான். உழைச்சுச் சம்பாதிச்ச பணத்தைத்தான் வைச்சுக்கணுமாம்! இந்த மாதிரி ஒரு பைத்தியத்தைப் பார்த்திருக்கீங்களா? அதுக்காகத்தான் நாங்க அவனைக் காந்தின்னு கூப்பிடறோம்...''

இந்தப் பேச்சு பாண்டேக்கு ரசிக்கவில்லை. மதன்தாஸ் அவனை அறியாமலேயே தம்மையும் தம் போன்றவர்களையும் அல்லவா குத்திக் காட்டுகிறான்! நல்ல வேளையாக அதற்குள் 'இருட்டறை' வந்துவிட்டது.

'இருட்டறை' என்ற பெயர் பொருத்தம் தான். மேஜைகளின் மேல் சிறிய மெழுகு வர்த்திகள் எரிந்து கொண்டிருந்தன. அந்த வெளிச்சத்தில் விருந்தினர்கள் உணவருந்திக் கொண்டிருந்தார்கள். சீருடை அணிந்த வெயிட்டர்கள் பூனைபோல் அரவமின்றி இங்குமங்கும் போய்க் கொண்டிருந்தார்கள். அறையின் மறுபக்கத்தில் அமைக்கப்பட்டிருந்த மேடையின் மேல் மட்டும் எங்கிருந்தோ ஒரு பிரகாசமான ஒளிக் கற்றை வந்து விழுந்து கொண்டிருந்தது. அங்கே தன் உடலைச் சற்றே மறைத்துக் கொண்டிருந்த ஒரு பெண்! மேல் நாட்டு இசை காற்றில் மிதந்து வர அவள் நடனமாடிக் கொண்டிருந்தாள்.

மதன்தாஸ் ஒரு வெயிட்டரை அழைத்துக் கொண்டு வந்து அவனைப் பாண்டேக்கு அறிமுகம் செய்து வைத்தான். அவனிடம் ஏதோ தனியாகப் பேசிவிட்டுப் பாண்டேயிடம் ''இவன் எல்லாத்தையும் கவனிச்சுக்குவான். நான் வரேங்க'' என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டான்.

''நேத்து ரொம்ப நேரம் உங்களுக்காகக் காத்திருந்தேன். நீங்க வரல்லே. ரொம்ப லேட்டாத்தான் வந்தீங்களா?'' என்று பானர்ஜி பாண்டேயைக் கேட்டான்.

அவனுடைய கண்களைச் சந்திக்கக் கூசியது பாண்டேக்கு. ''இல்லேப்பா, நான் நேத்து இங்கே படுக்க வரவே யில்லே. ஒரு சிநேகிதனைப் பார்க்கப் போயிருந்தேன். அவன் வீட்டிலேயே சாப்பிட்டு விட்டுப் படுத்துட்டேன்.''

இதைச் சொல்லி விடை கொடுத்த பிறகும் அவன் நிற்கவே, ''ஏன் நின்னுக்கிட்டிருக்கே? என்ன வேணும்?'' என்று கேட்டார்.

பானர்ஜி தலையைச் சொறிந்தான். ''இல்லீங்க, உங்களை ஒண்ணு கேட்கணும்...''

''என்ன?''

''பாண்டேஜின்னு ஒருத்தரை எனக்கு ரொம்ப வருஷங்களுக்கு முன்னாலே தெரியும், அவரும் இப்போ பீஹார் முதல் மந்திரியா யிருக்காரே வக்கிரர், அவரும் அலிப்பூர் ஜெயில்லே இருந்தப்போ நானும் அங்கே இருந்தேன். அந்தப் பாண்டேஜி இப்போ எங்கே இருக்கார்னு தெரியுங்களா?''

''எனக்கு அப்படி ஒருத்தரையும் தெரியாதேப்பா! பீஹாரிலே எத்தனையோ பாண்டே! அவங்கள்ளே நீ சொல்ற ஆளை யார் கண்டாங்க?'' என்று சொல்லித் தப்பித்தார்.

இப்போது பானர்ஜியின் முகத்தில் ஒரு நிம்மதி தெரிந்தது. அவன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்: ''அப்பமன்னு வக்கிரர்ஜி மாதிரி அவரும் அரசியல்வாதியா ஆயிடலேன்னு நினைக்கிறேன். வக்கிரர்ஜி தான் ஒரேயடியா மாறிப் போயிட்டார். பழைய லட்சியங்களை மறந்துட்டுப் பதவி ஆசை பிடிச்சு அலையறார்! நல்ல வேளை, பாண்டேஜி காந்திஜியை மறக்காமே தம் வழியிலே மக்களுக்கு ஏதோ சேவை செஞ்சுக்கிட்டிருக்கார்னு நெனைக்கிறேன். அவர் நல்லா இருக்கணும்!''

பாண்டே இருப்பதாகத் தான் பாவித்த திசையை நோக்கிக் கும்பிட்டான் பானர்ஜி.

சில நாட்களுக்குப் பின் நாளிதழில் ஒரு செய்தி வந்திருந்தது. ''பீஹார் எம். எல். ஏ. ஸ்ரீ லோக்நாத் பாண்டே திடீரென்று தம் எம். எல். ஏ. பதவியைத் துறந்துவிட்டார். அவர் தம் கிராமத்தில் உள்ள தம் சொந்த வீட்டை மருத்துவ மனை அமைப்பதற்காக நன்கொடையாக அளித்து விட்டதாகவும் தம் கிராமத்திலேயே ஆசிரியராகப் பணிபுரியப் போவதாகவும் சொல்லிக் கொள்கிறார்கள்.''

சுயநலமே உருவெடுத்திருந்த அரசியல்வாதி பாண்டேயை மறுபடியும் தேசபக்தராக, தியாகியாக மாற்றிய ரசவாதத்தை விளைத்தது தனக்கு அவரிடமிருந்த உறுதியான நம்பிக்கையே என்ற உண்மை துளசி பானர்ஜிக்கு எப்படித் தெரியும்!

# கைநிறையக் காசு

**கை** நிறையக் காசு வந்தால் பை நிறையச் சிரமங்களும் வரும் என்பதை விளக்க அரும்பாடு பட்டிருக்கிறார்கள். இது முழுநீள ஹாஸ்யப் படமானாலும், வேண்டும் அளவுக்குச் சோகமும் இருக்கிறது; குடும்பக் கஷ்டமும் இருக்கிறது. வருவாய் போதாமல் சிரமப்படும் குடும்பத்துக்கு மேலும் அடி — பட்ட காலிலே படுகிறது. புது மாதிரியாக ஆரம்பித்த கதை இடைவேளைக்குப் பிறகு வழக்கமான தண்டவாளத்திலேயே ஓட ஆரம்பித்து விடுகிறதே! ஒரு பணக்காரன் மேலும் பணக்காரனாகும் ஆசையில், ஐந்து லட்ச ரூபாய் இன்ஷ்யூரன்ஸ் தொகையைப் பெறுவதற்கு அதே உருவமுள்ள ஒருவனைத் தேடிக் கொலை செய்து அத்தொகையைப் பெறச் சதித் திட்டம் தீட்டுகிறான். நாகேஷுக்கு இரட்டை வேடம். நம்ப முடியாத சதித் திட்டம், படத்துக்குக் கிடைக்க வேண்டிய பாராட்டை நம்ப முடியாமல் சதி செய்கிறது.

எல்லாக் குறைகளையும் ஈடு செய்து சரிக்கட்டுகிறது நாகேஷின் நடிப்பு. ஏழையாக அவர் போடும் கோலம் உருக்கமாயிருக்கிறது. இமரென்று ரூபாய் இருபத்தையாயிரத்தைப் பார்த்ததும் அவர் படும் ஆனந்த வேதனை—பிரமாதம். நோட்டுக்களைப் பத்திரமாக வைக்கக் கணவனும் மனைவியுமாக இடம் தேடுவதும் தவிப்பதும் அருமையான கட்டம்! நாகேஷ் பல சந்தர்ப்பங்களில் பார்வையாலேயே நடித்து விடுகிறார்.

நாகேஷுக்கு ஈடு கொடுத்துப் படத்துக்கும் மெருகூட்டியிருப்பவர் பிரமீளா. இப்படத்தில் அவருக்குக் காதலிக்க நேரமில்லை; வாய்ப்பும் இல்லை. ஆனால் நாலு குழந்தைகளுக்குத் தாயாக, வறுமையில் வாடும் குடும்பத்தின் தலைவியாக வந்து உள்ளம் நெகிழ நடிக்க வாய்ப்பிருக்கிறதே! ஆடை ஆபரண அலங்காரங்கள், பாரமான நீலக் கொண்டை, இடுப்பு நெளியும் வாத்து நடை முதலிய கவர்ச்சிகள் எதுவும் இல்லாமல், பிரமீளா அவருக்கே முற்றிலும் புதிய முறையில் நன்றாய் நடித்திருக்கிறார். அவர் அணிந்திருக்கும் வயதைக் குறிக்கும் மூக்குக் கண்ணாடி நல்ல நடிப்பையும் காட்டியிருக்கிறதே!

''பெரிய காரிலே ஏறணும்னு ஆசை. அது தான் முடியலே. பெரிய காராவது என்மேலே ஏறப்படாதா?''

''ஆறிலேயும் சாவு, நூறிலேயும் சாவு — ஆனால் காரிலேயும் சாவுன்னு சொல்லியிருக்காங்களா?''—இவைபோன்ற சுவையான வசனங்களுக்காக மௌளியைப் பாராட்டலாம்.

ஒளிப்பதிவு மிகவும் சுமார். உணர்ச்சி ததும்பும் கட்டங்களில் 'க்ளோஸப்' காட்சிகளைத் தவிர்த்து விட்டார்களே!

எம். ஆர். ஆர். வாசுவும், சச்சுவும் நகைச்சுவைக் கட்டங்களுக்குத் துணை நிற்கிறார்கள். தேங்காய் சீனிவாசன் இன்ஸ்பெக்டராக வந்து விட்டபடியால் வழக்கமான அவரது நகைச்சுவை பயந்து ஓடிவிட்டது போலும்!

ஏ. சகுந்தலா வில்லி. சதித் திட்டம் தீட்டி, நாகேஷை ஆட்டிப் படைத்து, நீச்சல் குளத்திலும், நடனக் காட்சிகளிலும் கவர்ந்திருக்கிறார். ஏ. பி. ராஜின் டைரக்ஷன் குறை சொல்ல இடம் வைக்கவில்லை. கைநிறையக் காசு யாரிடமும் எப்பொழுதும் தங்கி யிருக்காது. ஓடியே போய்விடும்! — **காந்தன்**



# மோதி
# இன்பக் குளியலுக்கு இந்தியாவின் இணையற்ற சோப்

இப்போது இரண்டு சைஸ்களில் உங்களை நாடி வருகிறது. இந்த சோப் தரும் வளம் பொருந்திய பட்டுப்போன்ற நுரை உங்கள் மேனியில் பட்டுக் கொஞ்சும் போது உடல் புல்லரிக்கும். அந்த இன்பத்தில் குளித்து எழுகையில் உலகமே இன்பமயமாகத் தோன்றும். மோதி உங்களுக்கெனவே உருவாக்கப் பட்டது. மல்லிகை, ரோஜா, வெட்டிவேர் ஆகிய மூன்று நறுமணங்கள். இன்றே ஒன்றைத் தேர்ந்தெடுப்பீர். நாளை முதலே இன்பவாரிதியில் குளிப்பீர்!

## மோதி

இன்பக் குளியலுக்கான
இணையற்ற சோப்
**இப்போது இரண்டு சைஸ்களில் கிடைக்கிறது.**




டாடா தயாரிப்பு.

OBM-2384 TM

# நற்குணங்கள் பேசுகின்றன!

உடலில் ஊனம்
உள்ளத்தில்
ஊக்கம்

திரு சுப்பிரமணியம் சொன்னார்: ''விளையாட்டு வினையில்தான் முடிய வேண்டும் என்பதில்லை. விவாகத்திலும் முடியலாம்! என் வரையில் அப்படித்தான் நடந்தது!''

திரு சுப்பிரமணியம் மந்தவெளிப் பகுதியைச் சேர்ந்த கார்ப்பொரேஷன் மின்சார 'சப்–ஸ்டேஷ'னில், ஒரு தொழிலாளியாக இருப்பவர். அதாவது 'லைன் மேன்'. அவருக்கு வேலை நேரம் போக, பொதுத் தொண்டிலும் அபார ஈடுபாடு. முற்போக்கான கருத்துக்களைக் கொண்டவர். அவரிடம் ஒரு நாள் ஒரு நண்பர் பேச்சுவாக்கில், ''சீர்திருத்தமெல்லாம் பேச்சளவில் இருந்தால் போதுமா? செயலில் காட்ட வேண்டும்'' என்றார். ''பேச முடியாத நிலையில் உள்ள ஒரு பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளத் தயாரா?''

சுப்பிரமணியம் அந்த நண்பரின் பேச்சை விளையாட்டாகக் கொள்ளவில்லை!

''என் பதிலை, செயலில் காட்டத் தயாராக இருக்கிறேன்!'' என்றார்.

இதன் பின்னர் இன்றைக்கு ஓர் ஆண்டுக்கு முன்னால் சுப்பிரமணியம் சாந்தா எனும் பெண்ணை மணம் புரிந்து கொண்டார்.

சாந்தோம் அருகில் சையத் அகமது உசேன் தெருவில் சுப்பிரமணியம் தம்பதி மகிழ்ச்சியோடு வாழ்ந்து வருகிறார்கள்.

தம்மைப் பற்றிய விவரங்களை எனக்குக் கூறுமாறு தம் கணவரிடம், உதட்டசைவிலும், சைகையிலும் உணர்த்தினார் சாந்தா. சுப்பிரமணியம் விவரம் கூறினார்: ''இவள் சாந்தோம் ரோட்டரி சர்ச்சால் நடத்தப்படும் செவிடர்–ஊமையர் பள்ளியில் பத்தாம் வகுப்பு வரையில் படித்திருக்கிறாள்.''

''வீட்டுக்குத் தேவையான பொருள்களை வாங்குவதற்குக் கடைகளுக்குப் போய் வருவதில் சிரமம் இருக்கிறதா?''

''அவளுக்கென்ன? எழுதத் தெரியாதா? பட்டியல் போட்டுக் காட்டி வாங்கி வந்துவிடுவாள். தினமும் பஸ்ஸில் கிண்டிக்கு வேலைக்குப் போய் வருகிறாளே!....''

சாந்தா 'கார்க் இண்டஸ்ட்ரீஸ்' என்னும் நிறுவனத்தில் பணி புரிகிறார். மாதம் நூறு ரூபாய்க்கு மேல் ஊதியம் பெறுகிறார்! திருமணத்துக்கு முன்பிருந்தே அவர் வேலை பார்த்து வருகிறாராம்.

திருமணத்துக்குமுன் சுப்பிரமணியத்துக்கு மிகவும் வேண்டியவர்ஒருவர் கேட்டாராம்: ''மனைவி பேசாப் பதுமையாக இருந்தால் வாழ்க்கை சுவாரசியமாகவே இருக்காதே!'' என்று.

அவருக்குச் சுப்பிரமணியம் அளித்த பதில் இதுதான்: ''நன்றாகப் பேசவும், பாடவும்கூடிய ஒரு பெண்ணை மணந்து கொண்டு குடித்தனம் நடத்துவதாகப் பேச்சுக்கு வைத்துக் கொள்வோம். அந்தப் பெண் திடீ



ரென்று நோய்வாய்ப்பட்டு நாக்கு இழுத்துக்கொள்ள, பேசும் சக்தி இழந்துவிட்டால் என்ன செய்வது? அவளைக் கைவிட்டுவிட முடியுமா?''

பேச முடியாத குறையை இட்டு நிரப்பக்கூடிய வேறு பல நற்குணங்களைத் தமது மனைவியிடம் காண்கிறார் சுப்பிரமணியம்.

பேட்டி: ஏ. சுவாமிநாதன்

**வெளியே இருள் உள்ளே ஒளி!**

பார்வையற்றவர்களுக்கென்று விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட சுத்தி, அளவுகோல் ஆகியவற்றின் உதவியுடன் அமெரிக்காவில் குருடர் பள்ளி மாணவர்கள் ஓரே அறை கொண்ட இந்த வீட்டையே கட்டி முடித்து விட்டார்கள்! அஸ்திவாரம் முதல் மின் இணைப்புகள் வரை சகலத்தையும் இருபது பார்வையற்ற மாணவர்களே கவனித்துச் செய்தனர்!



# புதிதில் எல்லா ஃபேன்களும் நன்றாகவே தோற்றமளிக்கின்றன.

ஓராண்டுக்குப் பின்பு உங்கள் ராலிஃபேனை அதேசமயத்தில் வாங்கிய வேறு ஃபேன்களோடு ஒப்பிட்டுப் பாருங்கள். அடேயப்பா! எவ்வளவு வேறுபாடு. நீங்கள் கடையில் பார்த்த மாதிரியே கவர்ச்சி குன்றாமல் இருக்கிறது ராலிஃபேன். வாங்கிய முதல் நாளன்று வேலை செய்ததுபோலவே கச்சிதமாக இயங்குகிறது. ராலிஃபேனின் வலுவான அமைப்பின் காரணமாக, ஆண்டுக் கணக்கில் அது தொல்லையற்று ஓடிக் கொண்டிருக்கிறது ராலிஃபேனுக்கு நீங்கள் கொஞ்சம் கூடுதலாகவே பணம் கொடுக்க வேண்டியதாக இருக்கலாம். ஆயினும் அதனால் நீங்கள் அடையும் பயன்கள் பல உண்டு: ☐ 'பிளேட் கான்ட்டூர்'களின் நூதனமான அமைப்பினால், பரந்த சுற்றளவிற்கு, சீரான காற்றோட்டம், அதிக வேகத்தில் கிடைக்கிறது. ☐ பிளேடுகள் கச்சிதமாகச் சமநிலைப்படுத்தப் பட்டிருப்பதால் மோட்டார் நீண்ட காலம் உழைக்கிறது. ☐ சரியாக நிலைப்படுத்தப்பட்ட 'ஸ்டாண்ட்' காரணமாக எந்தச் சாய்மானக் கோணத்திலும் சரளமான ஓட்டம் கிடைக்கிறது. ☐ சரியாக அமைக்கப்பட்ட அதன் ஆதாரம் எடையில் குறைந்தது; எனினும் வலுவானது. ☐ நவீனமான 'ஸ்டோவ் எனாமல்' முறை 'இன்ஃப்ரா-ரெட் பேக்கிங் விசேஷ பெயிண்ட பூச்சு காரணமாக அது சொரசொரப்பின்றி பளபளப்பு மங்காமல் இருக்கிறது. ☐ தேர்ந்தெடுக்க வசதியாக கவர்ச்சியான ஏழு 'டூ-டோன்' வண்ணங்கள். சைஸ்கள்—டீலக்ஸ் 400 மிமீ. மற்றும் 300 மிமீ. எலிகண்ட்: 400 மிமீ.

# பொன்னாடை எதற்கு?



பூவாளூர் சுந்தரராமன்

முருந்த ராவுக்குப் பிரிவுபசார விழா ஏற்பாடாகியிருந்தது. அவ்வூரில் கடந்த முப்பது ஆண்டுகளாக ஆசிரியராக இருந்து சென்ற வாரம்தான் அவர் ஓய்வு பெற்றார். அவரிடம் படித்த பழையமாணவர்களும் புதிய மாணவர்களும் விழாவுக்கு ஏற்பாடு செய்திருந்தனர்.

அவ்வூர் சென்ற முப்பது ஆண்டுகளில் எவ்வளவோ மாறுதல் அடைந்திருந்தது. நாற்றைம்பது மாணவர்களுடன் ஓட்டுச் சாவடியில் கோவில் கொண்டிருந்த பள்ளிக்கூடம், இன்று இரட்டை மாடிக் கட்டிடத்துடன் விளங்கியது. பரந்த விளையாடுமிடம் ஆயிரத்துக்கும் மேற்பட்ட மாணவர்களைக் கொண்டிருந்தது. அந்தப் பள்ளிக்கூடத்தின் ஒவ்வொரு சிறு வளர்ச்சியிலும், மாறுதலிலும் முருந்த ராவுக்குப் பெரும் பங்கு உண்டு.

தேநீர் விருந்து பள்ளி விளையாட்டு மைதானத்தில் ஏற்பாடாகியிருந்தது. அவ்வூரிலேயே பெயர் பெற்ற உணவு விடுதி அந்தப் பணியை மேற்கொண்டிருந்தது. நூற்றுக்கணக்கான மடக்கு நாற்காலிகளும் மடக்கு மேஜைகளும் லாரியில் வந்து இறங்கின. எறும்புகளைப் போல் பரபரப்புடன் உணவு விடுதிச் சிப்பந்திகள் அங்குமிங்கும் குறுக்கும் நெடுக்குமாக ஓடியாடி இயங்கிக் கொண்டிருந்தனர்.

இவற்றையெல்லாம் சிறிது தொலைவில் மாடி அறையிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த முருந்த ராவின் உள்ளத்தில் பழைய எண்ண அலைகள் வந்து மோதின! அந்த நாட்களும், நிகழ்ச்சிகளும் அவர் உள்ளத்தில் தான் எத்தனை பசுமையாக ஒளி வீசிக் கொண்டிருந்தன!

அவருக்கு நன்றாக ஞாபகம் இருந்தது. அவருடைய மாமா ஒருவருடைய சிபாரிசால் அந்த ஊர்ப் பள்ளியில் ஆசிரியர் வேலை அவருக்குக் கிடைத்தது. அப்போது அது தாலுகா போர்டு பள்ளிக்கூடம்; தாலுகா போர்டின் தலைவர் ஒரு பெரிய மனிதர். அவரை அவர் மாமாவுக்குத் தெரியும். அவர் சொல்லி உத்தரவு கிடைத்தது.

உத்தரவு கிடைத்ததும் முருந்த ராவுக்கு ஒரு புதையலே கிடைத்து விட்டதுபோல் மகிழ்ச்சி. வேலைக்கு வந்து ஒப்புக்கொண்ட போது ஐப்பசி மாதம்; ஒரே அடை மழை; அவர் பள்ளிக்கூடத்துக்குள் நுழைந்தபோது கூட 'நசநச'வென்று மழை தூறிக் கொண்டிருந்தது.

வேலை உத்தரவு கையில் கிடைத்தபோது ஏற்பட்ட மகிழ்ச்சியும், அதற்குப் பிறகு அன்றுவரையில் அவர் மனத்தில் கட்டியிருந்த கனவுக் கோட்டைகளும் அந்தப் பள்ளிக்கூடத்தை – அதன் சூழ்நிலையைப் பார்த்த அதே நேரத்தில் சுக்கு நூறாக உடைந்து சிதறிவிட்டன! ஆம், அந்தச் சின்னப் பள்ளிக்கூடம் அவர் மனத்தைக் கவரவே யில்லை! நகரத்தில் பெரிய கல்லூரியில் படித்துவிட்டு வந்த அவருக்கு அந்தக் கிராமமும், அந்தச் சூழ்நிலையும் பிடிக்கவே யில்லை. சகிக்க முடியாத நாற்றச் சகதியில் அகப்பட்டுக் கொண்டதைப் போல் இருந்தது. எந்த ஒரு வகுப்பிலும் இருபதுக்கும் மேற்பட்ட மாணவர்கள் இல்லை; எந்த மாணவனும் ஒரு சலவைச் சட்டை அணியவில்லை. அந்த நிலையை, சூழ்நிலையை முருந்தராவ் எதிர்பார்க்கவே யில்லை!

காலையில் வயிறாரப் 'பழையது' சாப்பிட்டு விட்டு வந்து, வகுப்பில் பாடத்தை நடத்தும் போது கொட்டாவி விட்டுக் கொண்டிருந்த மாணவர்களைத் தவிர சுறுசுறுப்புடனே, நுட்பப் புத்தியைக் காட்டும் தீர்க்கமான விழிகளுடனே கூடிய எந்த மாணவனையும் அவர் வகுப்பில் காணவில்லை. அவருக்கு ஒரே ஏமாற்றமாக இருந்தது!

அன்று மாலை ஊரைச் சுற்றிப் பார்க்கச் சென்றார். கிராமாந்தர மக்கள்; எந்தக் காரியமும் 'மதனமாக'–மெதுவாக–பரபரப்பில்லாமல் நடப்பதைப் பார்த்தார். ஊரைச் சுற்றிலும் வயல்கள்; தோப்புகள்; தோட்டங்கள். அந்த இயற்கைக் காட்சிகள் எதுவும் அவர் மனத்தை அந்த வயதில் கவரவில்லை.

தெருக்களெல்லாம் மண்ணும் புழுதியும் சேறும் சகதியுமாகக் காட்சி யளித்தன; எங்கு பார்த்தாலும் குப்பை கூளங்கள்; வீட்டுக்கு வீடு மாடுகளும், வண்டிகளும்; ஆடுகள், கோழிகள், நாய்கள் – தெருவை அடைத்துக் கொண்டு நின்றன.

முருந்தராவுக்குத் தலை சுற்றியது. நரகமே அதுதானோ என்று சந்தேகித்தார். பாவம், நீரிலிருந்து எடுத்துத் தரையில் போட்ட மீனைப்போலத் தவித்தார். வந்த மூன்றும் நாள் மாலை வேலை வேண்டாம் என்று ராஜிநாமாக் கடிதம் ஒன்றைத் தலைமை ஆசிரியரிடம் நீட்டினார்!

தலைமை ஆசிரியர் வயது முதிர்ந்தவர்; வாழ்க்கையில் நாளும் பார்த்தவர். அனுபவம் அவருடைய முகத்தில் ரேகைகளாகப் பதிந்திருந்தன.

முகுந்தராவின் ராஜிநாமாக் கடிதத்தைப் படித்ததும் அவருக்குச் சிரிப்பு வந்தது.

"என்ன திடீர்னு..."

"எனக்கு ஒண்ணுமே பிடிக்கவில்லை, ஸார்!"

"அப்படீன்னா...?"

"இந்த ஊர், பள்ளிக்கூடம், பையன்கள் எல்லோருமே, எல்லாமே பிடிக்கவில்லை..."

"உனக்குக் கல்யாணம் ஆயிடுத்தா?"

"இல்லை, ஸார்!"

"அதனால்தான் இப்படி அவசரப்படுறாய்! என் வார்த்தையைக் கேளு. ஏதோ கிழவன் சொல்லறேனென்னு அலட்சியப்





படுத்தாதே. இன்னும் கொஞ்ச நாட்கள் — நாலைந்துமாதங்கள் இருந்து பார்...!"

"அதற்குள்ளே என்ன ஸார் மாறுதல் ஏற்பட்டு விடும்? இந்த நரகம் சுவர்க்கமாகி விடுமா?" என்றார் வெறுப்புடன் முகுந்த ராவ்.

"பழகப் பழகத் தானே தெரியும்! இந்தக் கோடை லீவு வரையிலும் இருந்து பார்த்து விடேன். அப்பொழுதும் பிடிக்கவில்லை என்றால் இருக்கவே இருக்கு, கால் கடிதாசி!"

முகுந்த ராவ் அரை மனதாக அந்த வார்த்தையை ஏற்றுக் கொண்டார். பிற்காலத்தில் அதை அவர் நினைத்துப் பார்க்காத நாளே கிடையாது. இன்று அதை நினைக்கும்போது... ஆனந்தக் கண்ணீர் பெருகிப் பார்வையை மறைத்தது!

அடுத்த இரண்டு மாதங்களுக்குள்ளேயே அந்தத் தலைமை ஆசிரியர் சொன்னபடியே அந்த ஊரும், பள்ளிக்கூடமும் அவர் மனத்தைக் கவர்ந்து விட்டன!

ஆறு ஆண்டுகளுக்குப் பின் அவரே தலைமை ஆசிரியர் ஆனார். அன்று முதல் ஓய்வு பெறும் வரையில் — தாலுகா போர்டுகள் மறைந்து ஜில்லா போர்டின் நிர்வாகத்துக்குள் வந்து, பிறகு அதுவும் நீங்கி அரசாங்கப் பள்ளியாக மாறின பிறகும்கூட அவரே தலைமை ஆசிரியராகப் பணியாற்றினார். அவருக்குக் கீழே வேலை செய்த ஆசிரியர் பலர் வந்து மாற்றலாகிப் போயும் கூட அவர் மட்டும் அந்த ஊரை விட்டு மாறவில்லை.

அவருக்குக் கல்யாணம் ஆயிற்று. ஆண்களும் பெண்களுமாகக் குழந்தைகள் பிறந்தனர்; வளர்ந்தனர். அவர் பள்ளிக்கூடத்திலேயே கல்வி கற்றனர். பிறகு பக்கத்து நகரத்திலிருந்த கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்று உத்தியோகங்களில் அமர்ந்தனர். அவர்களுக்கும் கல்யாணம், கார்த்திகை என்னும் 'நாளும் கிழமை'யும் அந்த ஊரிலேயே நடைபெற்றன.

இந்தப் பழைய எண்ணங்கள் அலைஅலையாக அவர் உள்ளத்தில் குவிந்தன. கண்களிலிருந்து பெருகும் ஆனந்தக் கண்ணீரைப் பெருமிதத்துடன் அடிக்கடி துடைத்துக் கொண்டார் முகுந்த ராவ்.

பொன்னாடை போர்த்தி, பொற்கிழி பரிசளிக்கும் விழாவுக்கு முன் சிற்றுண்டி ஆரம்பமாயிற்று. விளையாட்டு மைதானம் முழுதும் நாட்டின் நாலாபக்கங்களிலும் இருந்து




வந்திருந்த பழைய மாணவர்கள், உள்ளூர்ப் பிரமுகர்கள், ஆண்களும் பெண்களுமாகக் கூடிச் சிற்றுண்டி உண்டனர். யாவருடைய முகத்திலும் மகிழ்ச்சி!

அக்கூட்டத்தில் நடுநாயகமாக உட்கார்ந்திருந்த முகுந்த ராவ் முன் அந்த உணவு விடுதிச் சிப்பந்தி — சர்வர் — ஒருவன் மட்டும் அடிக்கடி வந்து வெகு அன்புடன் விசாரித்த வண்ணமாக இருந்தான். ஒவ்வொரு 'அயிட்டத்தை'யும் இரண்டு முறை கொண்டு வந்து பரிமாறினான். அடிக்கொரு முறை அவரிடம் வந்து, ''என்ன ஸார் கொண்டு வரட்டும்?'' என்று மிகுந்த மரியாதையுடன் கேட்டான்.

தம்மிடத்தில் அவன் காட்டும் அலாதியான அன்பு உபசரிப்பு முகுந்த ராவுக்குப் பெருமையாக இருந்தது. சிற்றுண்டி முடிவடைந்து யாவரும் எழுந்து மேடைக்குச் செல்லும் தருணம்; திடீரென்று அந்தச் 'சர்வர்' அவர் முன்னால் வந்து, மெதுவாக ''ஸார், என்னை உங்களுக்குத் தெரிகிறதா?'' என்று கேட்டான்.

முகுந்த ராவ் அவனை உற்றுப் பார்த்தார். ஞாபகத்துக்குக் கொண்டு வர முயன்றார். நினைவு வரவில்லை.

''நான்தான் பத்ரி...பத்ரிநாராயணன்!''

''எந்தப் பத்ரிநாராயணன்?''

''சன்னதித் தெரு...''

முகுந்த ராவ் புரியாமல் தலையைச் சொறிந்து கொண்டு நின்றார்.

''உங்களிடம் ஒன்பதாவது வகுப்புப் படித்துக் கொண்டிருந்தேன்...''

அவன் அவ்வளவு கூறியும் அவருக்கு நினைவு வரத்தான் செய்யவில்லை!

அதற்குள் விழாச் செயலாளர் அவரை மேடைக்கு வருமாறு அழைக்க, மேடையில் போய் அமர்ந்து கொண்டு விட்டார்.

விழா தொடங்கியது. பழைய மாணவரான ஒரு மாவட்ட நீதிபதி தலைமை தாங்கினார். பாராட்டுரை வழங்குபவர் ஒவ்வொருவராக ஒலிபெருக்கியின்முன்னால் வந்து முகுந்த ராவின் சேவையைப் புகழ்ந்து பேசினார்கள். அவருடைய தன்னலமற்ற சேவையினால் அவ்வூரே — அவ்வூர் மக்களின் ஒரு தலைமுறையே எவ்வளவு பயன் அடைந்திருக்கிறது என்பதை ஒவ்வொருவரும் பல உதாரணங்களைக் காட்டிப் போற்றினார்கள்.

அவற்றை யெல்லாம் கேட்கக் கேட்க முகுந்த ராவ் மகிழ்ச்சி வெள்ளத்தில் மெய் மறந்து போனார்.

ஆனால். அவ்வளவு பெரு மகிழ்ச்சியிலும் அவர் உள்ளத்தில் ஒரு சிறு பொறி! பத்ரி நாராயணன் உருவம் வந்து வந்து மறைந்து கொண்டிருந்தது. 'சர்வர்' உடை அணிந்து பம்பரம் போலச் சுழன்று வேலை செய்து கொண்டிருந்த அவன் உருவமும் பெயரும் அவர் மனத்தில் 'உலவா' முள் போல் உறுத்திக் கொண்டே யிருந்தது.

யார் இந்த ஏழை பத்ரி நாராயணன்?... ஒரு மின்னல் வெட்டு! அவருக்குத் திடீரென்று நினைவு வந்தது... ஆம், பெருமாள் கோவில் தெருவில் வசித்தான்; தகப்பனை இழந்தவன்; விதவைத் தாயார் அப்பளமும் வடாமும் இட்டு விற்று இவனைப் படிக்க வைத்தாள். ஆனால் பத்ரிக்குப் படிப்பில் பிடிப்பில்லை. ஊர் சுற்றுவான். வகுப்புக்கு நேரம் கழித்து வருவான். வீட்டுப் பாடங்களை ஒரு நாளும் செய்ய மாட்டான். முகுந்த ராவும் அவனை விட மாட்டார். பள்ளிக்கூடம் விட்டதும் அவனைப் பிடித்துக்கொண்டு வேலை வாங்குவார்; அவன் பெஞ்சு மேல் நிற்பது நாள் தவறாது. முகுந்த ராவின் பிரம்புக்கும் அவன் கைக்கும் தொடர்பில்லாத நாளே இடையாது. ஒரு நாள் விடாப் பிடியாக வகுப்பை விட்டு அடித்துத் துரத்தி விட்டார். பிறகு அவன் வரவே யில்லை. விசாரித்ததில் அவன் ஊரை விட்டே ஓடி விட்டான் என்று அறிந்து கொண்டார்... நாளடைவில் அவனை மறந்தும் விட்டார்.

இன்று அந்தப் பழைய நினைவுகள் மனத்தில் வந்து நங்கூரம் பாய்ச்சினாற்போல் நின்று அவரைக் குழம்பச் செய்தன.

இன்று பரிமாறுபவனாக, உடல் உழைப்பாளியாக, கடினமான, நிலையற்ற வாழ்க்கை நடத்த வேண்டிய நிலையில் பத்ரி இருக்கிறான்; பரிதாபமாக இருக்கிறான்! அதற்கு யார் காரணம்? யார் பொறுப்பாளி?

அவனை, அவன் சூழ்நிலையை அறிந்து கொண்டு, அன்பு பாராட்டி, தட்டிக் கொடுத்துப் படிக்கும்படி செய்திருந்தால்...? இன்று மேடையை அலங்கரித்த திருவின் செல்வர்களைப் போல அவனும் இருப்பானே!...,

இம்மாதிரி எத்தனை பேர்கள் வாழ்க்கையில் முன்னேறத் தவறியவர்களோ? தன் கோபப் பார்வைக்கும், கடு சொற்களுக்கும், தன் கையிலிருந்த நீண்ட பிரம்புக்கும், கண்டிப்புக்கும், கட்டுப்பாட்டுக்கும் உள்ளான — அந்த அக்கினியில் புடம் போடப்பட்ட ஒருசிலரே— விரல் விட்டு எண்ணிக்கை யுடையவர்கள்— முன்னுக்கு வந்தார்கள்! மற்றவர்கள் பத்ரி நாராயணன்கள்தானு?

அவரது மனம் கழிவிரக்கத்தால் அழுதது. தம்மிடத்தில் ஒப்படைக்கப்பட்ட சிறுவர்களை முன்னுக்குக் கொண்டு வராமல் தவற விட்ட செயலை நினைத்து நினைத்து மனம் புழுங்கினர். அவர் கண்களில் இதுகாறும் பொங்கி, வழிந்த ஆனந்தக் கண்ணீர் அவலக் கண்ணீராக மாறிச் சுட்டுக்கொண்டிருந்தது!

பேச வேண்டியவர்கள் யாவரும் பேசி முடித்து விட்டார்கள். அவைத் தலைவர் எல்லாவற்றையும் தொகுத்துக் கூறி அவருக்குப் பொன்னுடை போர்த்தினர். அவ்வூராட்சி மன்றத் தலைவர் பொதுமக்கள் சார்பில் இரண்டாயிரம் ரூபாய்க்கு ஒரு 'செக்'கை வழங்கினர்.

முருகந்த ராவ் நடுங்கும் கைகளால் அதைப் பெற்றுக் கொண்டார். பலரும் பாராட்டியதற்குப் பதில் கூற எழுந்து நின்றார். வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவர மறுத்தன. கண்களிலிருந்து மட்டும் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது! ''உங்களுடைய பேரன்புக்கு என் உளமார்ந்த நன்றியும், வணக்கமும் உரித்தாகுக! நீங்கள் என்மீது கொண்டுள்ள அன்புக்கு நான் தகுதியுடையவன்தானு என்பது எனக்கு விளங்கவில்லை; நன்றி கூற வார்த்தைகளுமில்லை! மன்னிக்கவும்'' என்று தடுமாற்றத்துடன் கூறி விட்டு நாற்காலியில் உட்கார்ந்தார்.

**வீ**ட்டிலிருந்த அவர் மனைவியும் குழந்தைகளும் அவர் கொண்டு வந்த பொன்னுடையையும், பூமாலையையும், 'செக்'கையும்கண்டு துள்ளிக் குதித்து ஆரவாரம் செய்தார்கள்.

ஆனல் முருகந்த ராவ் ஆனந்த மடையவில்லை; தம் மனத்தை அழுத்தும் துன்பச் சுமையை மறைக்க அன்று மாலைப் பதிப்பாக வந்த பத்திரிகையை எடுத்துப் படிக்கும் பாவனையாகத் தம் முகத்தை மறைத்துக் கொண்டார். மேல் பார்வையாகப் பத்திரிகையில் கண்களை ஓட்டினர். முதல் பக்கத்தில் பெரிய எழுத்துக்களில் கட்டமிட்டு வெளிவந்திருந்த ஒரு செய்தி அவர் பார்வையில் விழுந்தது.

'பல நாட்கள் திருடன் பிடிபட்டான். மன்மதன் என்ற நாற்பது வயதுள்ள ஆசாமி சென்ற பல ஆண்டுகளாகப் பல இடங்களில் நூற்றுக் கணக்கான திருட்டுக்களைச் செய்து விட்டுப் போலீசுக்கு 'டிமிக்கி' கொடுத்துக் கொண்டிருந்தான். அவனை இன்று மாலையில் இவ்வூர்ப் பள்ளிக்கு அருகில் போலீஸார் கைது செய்தனர்!' அவன் உருவப் படமும் வெளியாகி யிருந்தது.



''நேற்று இவன் பத்து பைசாவை விழுங்கியதற்கு மருந்து எழுதித் தரப் பத்து ரூபாய் கேட்டீர்கள். இன்று இவன் ஐந்து பைசாவை விழுங்கியதற்கு மருந்து எழுதித் தரவும் அதே பத்து ரூபாயைக் கேட்கிறீர்களே! இது என்ன நியாயம்? ஐந்து ரூபாய் வாங்கிக் கொள்ளுங்கள், டாக்டர்!''

முருகந்த ராவுக்கு 'ஷாக்' அடித்தது போல இருந்தது. மன்மதனும் அவருடைய ஒரு பழைய மாணவன்! அவனையோ அவன் பெயரையோ பல ஆண்டுகளாக மறந்திருந்தார். இன்று... இச்செய்தி அவரைப் பழி வாங்க அவர் முன் வந்து ஏன் நிற்க வேண்டும்?

முருகந்த ராவ் அவ்வூருக்கு வந்த புதிதில் அவன் எட்டாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். அப்போது மூன்றும் வருஷம் அந்த வகுப்பில். பதினறு பதினேழு வயதிருக்கும்; சதா மாணவர்களுடன் சண்டை; அடிபிடி. எவ்வளவோ கண்டித்துப் பார்த்தார்; படிப்பும் வரவில்லை; அவன் குணமும் திருந்தவில்லை. ஒரு நாள் வெறி வந்தவர் போல அவனை அடிக்க மறுநாள் முதல் அவன் வகுப்புக்கு வரவில்லை. அவன் வகுப்பை விட்டு 'ஒழிந்ததற்கு' அன்று ஒரு பெருமூச்சு விட்டார். இன்று அந்த மாணவன் திருடனுகக் காட்சி அளிக்கிறன்! பத்ரியாவது பரவாயில்லை, உழைத்துச் சம்பாதிக்கிறன் என்று மகிழலாம். ஆனல் மன்மதன்...? அவன் நடத்தைக்கும் தாம்தானு காரணம்?

முருகந்த ராவுக்கு மூளை குழம்பியது. உள்ளம் அழுதது. கண்கள் நீரைப் பெருக்கின. திருவேங்கடமுடையான் படத்தின் முன் நின்று கொண்டு நடுங்கும் கூப்பிய கரங்களுடன் ''பிரபு, என்னை மன்னித்துவிடு! நான் என் கடமையில் தவறிவிட்டேன்!'' என்று நெடுஞ்சாண்கிடையாக விழுந்தார்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு ஊராட்சி மன்றத் தலைவர் தமக்கு வந்த கடிதத்தை வைத்துக் கொண்டு ஒன்றும் புரியாமல் குழம்பிக் கொண்டிருந்தார். அவர் விழாவன்று முருகந்தராவுக்கு அன்பளிப்பாக அளித்த 'செக்' மாற்றப்படாமல் திரும்ப அனுப்பப்பட்டிருந்தது. அத்துடன், ''நான் செய்த தொண்டைக் காட்டிலும் செய்யத் தவறிய பணிகள் மிகப் பல; ஆகையால் தங்கள் பரிசை ஏற்றுக் கொள்ள எனக்கு உரிமை இல்லை'' என்று அவர் எழுதியிருந்த குறிப்பும் இருந்தது.

# எஃகு நகரம்
# ஒரு பூஞ்சோலை நகரமாகவும் ஆக முடியுமா?

இந்தியாவின் எஃகு நகரமான ஜாம்ஷெட்பூர் ஒரு முன்மாதிரி நகரமாகத் திகழவேண்டும் என்றே திட்டமிடப்பட்டிருந்தது.

''நிழல் தரும் மரங்களைக் கொண்ட, அகன்ற தெருக்களாக அமைத்திட மறந்திட வேண்டாம். ஒன்று விட்டு ஒன்று, துரிதமாக வளர்ந்திடும் வகை மரங்களை நடவும். புல்வெளிகளுக்கும் பூங்காக்களுக்கும் போதிய வசதி செய்திடவும்.''—என்று ஜாம்ஷெட்ஜி டாடா தனது மகன் தோராப்புக்கு எழுதியிருந்தார்.

இன்று ஜாம்ஷெட்பூர் அவ்வண்ணமே உள்ளது—எஃகு நகரத்தோடு ஒரு பூஞ்சோலை நகரமாகவும் பரிமளிக்கிறது.

குடியிருப்பு வீடுகள் கூட, எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் ஜாம்ஷெட்ஜி வெளியிட்ட விருப்பங்களை நினைவில் நிறுத்தி, திட்டமிட்டு அமைக்கப் பட்டிருப்பதோடல்லாமல், இன்னும் விரிவுபடுத்தப்பட்டுக்கொண்டே இருக்கின்றன.

மரங்களின் அடர்த்தியில்
தொழிற்சாலை கண்ணுக்குப்
புலப்படுவதே இல்லை!



**டாடா ஸ்டீல்**



AIYAPS-TS.5 TM

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

நூற்றில் ஒரு ஆடவரே மதுரா துணிவகைகளிலிருந்து தயாரிக்கப்பட்ட ஆடைகளை அணிகிறார்.

# நீங்கள் அவரைச் சுட்டிக் காட்டிச் சொல்லி விடலாம்

ஆடவர்கள் யாவரும் சமமாகப் பிறந்தவர்களே. ஆனால் மதுரா சூட்டிங் அணிந்த ஆடவர் எண்ணற்ற மக்களிடையே தலைநிமிர்ந்து நிற்கிறார்.

மதுரா அளிக்கும் 260 சாயல்களில் தரம் செறிந்த 'டெரீன்' இழை கலந்த சூட்டிங்குகள். அதோடு எண்ணிலா நிறுவகைகளில் 'டெரீன்' இழை கலந்த ஷர்ட்டிங்குகள். அவை யாவும் கண்கவர் தோற்றமுள்ளவை. தனிப் பெருஞ்சிறப்பு வாய்ந்தவை. அவாவைத் தூண்டுபவை.





**மதுரா துணிகள்**

**மதுரா மில்ஸ்**
மதுரை, தென் இந்தியா.

விநியோகஸ்தர்கள்: மதுரா சௌத் இந்தியா கார்ப்பொரேஷன் (பிரை) லிட்., மதராஸ்-1. ஹாஜி பி. ஸையத் மொகமத், விருதுநகர். டி.எம்.எஸ் டெக்ஸ்டைல்ஸ், மதுரை-1. வி.வி.வி. ஆர். முருகேச முதலியார் & சன்ஸ், ஈரோடு-1. வி.வி.வி. ஆர். முருகேச முதலியார் & சன்ஸ், சேலம்-2.

சில்லறை விலை ஷோரூம்கள்: தரூப் எண்டர்ப்ரைசஸ், அம்மன் சந்நிதி தெரு, மதுரை. செட்டிநாடு ஏஜன்ஸீஸ், 40, மௌண்ட் ரோடு, மதராஸ்-2. வி.வி.வி. ஆர். முருகேச முதலியார் & சன்ஸ், 139, ஒப்பணக்கார தெரு, கோயம்புத்தூர்-1. பாண்டியன் எண்டர்ப்ரைசஸ், 25, சின்ன கடைத் தெரு, திருச்சி. செட்டிநாடு ஏஜன்ஸீஸ், ஸி-7, யூனிட்டி பில்டிங், ஜே.ஸி. ரோடு, பெங்களூர்.

5 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)



# எழுச்சி

ஒரு புத்தெழுச்சி நம் நாட்டின் பெரும் பாகங்களில் பெருக்கெடுத்தோடுகிறது. பல பரந்த நிலப்பகுதிகளில் உயர் விளைச்சல் வகைகள், உரங்கள், பூச்சித்தடுப்பு மருந்துகள், விவசாய இயந்திரங்கள் போன்றவற்றைக் கையாண்டு விவசாயிகள் பயிர் விளைச்சலில் அநேக அரிய சாதனைகள் புரிந்து வெற்றி கண்டுள்ளனர்.

இது ஓர் ஏற்றமிகு எழுச்சி. இதனைப் போற்றிக்காக்க வேண்டும். நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் இதனைப் பரப்ப வேண்டும். இப்பசுமைப்புரட்சிக்கு உதவிய கருவிகளும் செய்முறைகளும் பல்லாயிரம் விவசாயிகளுக்குக் கிடைக்கச் செய்ய வேண்டும். அப்போதுதான் பெருக்கெடுத்தோடும் எழுச்சி நிரந்தரமான வளத்திற்கு வழி வகுக்கும்.

உலகில் மிகவும் விரும்பப்படும் டிராக்டரையும் விவசாய இயந்திரங்களையும் உற்பத்தி செய்யும் டா:பி இப்பசுமைப் புரட்சியில் தனது பங்கு குறித்துப் பெருமையுறுவதோடு இந்திய விவசாயத்தை நவீனப்படுத்தும் மகத்தான பணியில் மேலும் உறுதியான பங்கேற்கக் காத்துக் கொண்டிருக்கிறது.

TAFE